# சிறார்களுக்கான நாற்பது நபிமொழிகள்

கலாநிதி / முஹம்மத் பின் ஸுலைமான் பின்
அப்தில்லாஹ் அல்முஹன்னா



# சிறார்களுக்கான நாற்பது நபிமொழிகள்

ஆக்கம்

கலாநிதி / முஹம்மத் பின் ஸுலைமான் பின் அப்தில்லாஹ்
அல்முஹன்னா

ح جمعية الدعوة والإرشاد وتوعية الجاليات بالربوة ، 1445هـ

المهنا ، محمد بن سليمان
الأربعون الولدانية: أربعون حديثاً صحيحاً مع شرحها باللغة التاميلية. / محمد بن سليمان المهنا ؛ مركز أصول - ط1. .- الرياض ، 1445هـ

104 ص ؛ ..سم

رقم الإيداع: 1445/19263
ردمك: 978-603-8438-07-7

مركز أصول
Osoul Center
www.osoulcenter.com



+966 11 445 4900
+966 11 497 0126
P.O.BOX 29465 Riyadh 11457
www.osoulcenter.com

# முன்னுரை

*அகிலத்தாரைப் படைத்துப் பரிபாலிக்கும் அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும். ஸலாதும், ஸமாமும் எமது நபி முஹம்மத் (ஸல்) அவர்கள் மீதும், அவர்களது குடும்பத்தார், தோழர்கள், அனைவர் மீதும் உண்டாவதாக!*

*“நாற்பது நபிமொழிகள்” எனும் கருப்பொருளில் அறிஞர்கள் பல நூல்களைத் தொகுத்துள்ளனர். “அல்அர்பஊனன் நவவிய்யா” எனும் நூல் அவற்றில் மிகவும் பிரபலமானதாகும். இது மாணவர்கள் மனனமிடவும், அர்த்தங்களை விளங்கவும் இமாம் நவவீ (ரஹ்) அவர்கள் தொகுத்த நாற்பது நபிமொழிகளின் தொகுப்பாகும்.*

*இவ்வாறு நாற்பது மொழிகளைக் கொண்ட நூல்கள் சில வருமாறு : இமாம் ஹரவீ (ரஹ்) தொகுத்த “அல்அர்பஊன பீ தலாஇலித் தௌஹீத்” (ஏகத்தும் தொடர்பான நாற்பது நபிமொழிகள்), இமாம் இப்னுல் முபழ்ழல் (ரஹ்) தொகுத்த “அல்அர்பஊனல் இலாஹிய்யா” (நாற்பது இறையியல் நபிமொழிகள்), இமாம் இப்னு அஸாகிர் (ரஹ்) தொகுத்த “அல்அர்பஊனல் புல்தானிய்யா” (நாற்பது ஊர்களைச் சேர்ந்த நாற்பது ஹதீஸ்கலை அறிஞர்களின் நபிமொழிகள்). இவை போன்று இன்னும் ஏராளம் உள்ளன.*

*அல்லாஹ் என்னையும் கௌரவப்படுத்தியுள்ளான், எமது சிறார்கள் மனனமிடவும், விளங்கவும் மார்க்கத்தின் பல்வேறுபட்ட தலைப்புகளில் நாற்பது சிறிய நபிமொழிகளைத் தொகுத்துள்ளேன். சிறார்களுக்காகவே இது*

தொகுக்கப்பட்டுள்ளதால் இத்தொகுப்பிற்கு "அல்அர்பஊனல் வில்தானிய்யா" (சிறார்களுக்கான நாற்பது நபிமொழிகள்) எனப் பெயரிட்டுள்ளேன்.


**கலாநிதி / முஹம்மத் பின் ஸுலைமான்**

**பின் அப்தில்லாஹ் அல்முஹன்னா**

00966505490525

Twitter: @almohannam

E-mail: almohanna.m@gmail.com

# இந்நூல் பற்றி ஆறு குறிப்புகள்

1. இந்நூல் சிறார்களுக்கு உகந்தது. அவ்வாறே வளர்ந்தோருக்கும் இது பொருந்தும். இதில் அல்குர்ஆன் வசனம், நபிமொழி, அறிஞர்களின் கூற்றுகளிலிருந்து பெறப்பட்ட வார்த்தைகள், அல்லது கருத்துக்கள் அடங்கிய பயனுள்ள தகவல்கள் மாத்திரமே உள்ளன.

2. இலகுவாக மனனமிடவே இச்சிறு நபிமொழிகளைத் தேர்வு செய்துள்ளேன். அதிக பயன் கிட்டவே பல்வேறு தலைப்புகளில் வகைப்படுத்தியுள்ளேன்.

3. இலகுவாக மனனமிடவும், மீட்டவும் நூலின் இறுதியில் அனைத்து நபிமொழிகளையும் முழுமையாக, தொடர்ச்சியாகக் கூறியுள்ளேன்.

4 அடிப்படையில் சிறார்கள் மனனமிடுவதற்காகவே இந்நாற்பது நபிமொழிகளையும் தொகுத்துள்ளேன். எனவே வீடுகள், கல்விக்கூடங்கள், மன்றங்கள் போன்றவற்றில் இதனை மனனமிடுவதற்கான போட்டி நிகழ்ச்சிகளை நடத்துமாறு ஆலோசனை தருகின்றேன்.

5 சிறார்கள் இதனை மனனமிட முன் அவர்களின் நாவுகளைச் செம்மைப் படுத்தவும், இந்நபிமொழிகளிலிருந்து பெறப்பட்ட இஸ்லாமிய ஒழுக்க நெறிகளை அவர்களுக்குப் போதிக்கவும் ஆண், பெண் பிள்ளைகளுக்கு இந்நூலை முதலில் வாசித்துக் காட்டுவதற்கு பெற்றோர்கள், ஆசிரிய, ஆசிரியைகள் ஆகியோரை ஊக்குவிக்கின்றேன்.

6 நபிமொழியின் விளக்கவுரையில் பல கருத்துக்கள், பயன்பாடுகள், வழிகாட்டுதல்களைநான்கூறியிருந்தாலும், அதனை விட மிக அதிகமான கருத்துக்கள், பயன்பாடுகள், வழிகாட்டுதல்கள் மேலும் உள்ளன. எனவே சிறார்கள் தனியாகவோ, பிறர் துணையுடனோ அவற்றை ஆராய்ந்தெடுத்து, தானும் பயனடைந்து, பிறருக்கும் பயனளிப்பதற்காக அவற்றைப் பகிர்ந்து கொள்ளுமாறு எதிர்பார்க்கின்றேன்.

# 1

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : “இஸ்லாம் ஐந்து தூண்கள் மீது நிறுவப் பட்டுள்ளது, உண்மையாக வணங்கப்படத் தகுதியான இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை, முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என சாட்சி கூறல், தொழுகையை நிலைநாட்டுதல், ஸகாத் வழங்குதல், ஹஜ் செய்தல், ரமழானில் நோன்பு நோற்றல் ஆகும்”.

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் உமர் பின் கத்தாப் (ரலி).

ஆதாரம் : புஹாரி, முஸ்லிம் (1)

## விளக்கவுரை

இஸ்லாமிய மார்க்கத்தில் மிகக் கடமையான, மிக மிக முக்கியமான ஐந்து விடயங்கள் உள்ளதாக நபி (ஸல்) அவர்கள் இந்நபிமொழியில் எமக்குத் தெளிவு படுத்துகின்றார்கள். இஸ்லாத்தின் தூண்கள் என இவற்றிற்குக் கூறப்படுகின்றன.

முதலாவது: உண்மையாக வணங்கப்படத் தகுதியானவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை, முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என சாட்சி கூறுதல். இதுதான் மகத்தான தூணாகும். அஷ்ஹது அன்லாஇலாஹ இல்லல்லாஹு வஅஷ்ஹது அன்ன முஹம்மதர் ரஸூலுல்லாஹ் என வாயினால் மொழிந்து,

---

(1) ஸஹீஹுல் புஹாரி- அத்தியாயம் : இறைநம்பிக்கை, பாடம் : இஸ்லாம் ஐந்து தூண்கள் மீது நிறுவப்பட்டுள்ளது- (08), ஸஹீஹ் முஸ்லிம்- அத்தியாயம் : இறைநம்பிக்கை- (16).

உள்ளத்தால் நம்பிக்கை கொண்டவர் இஸ்லாமிய மார்க்கத்தில் பிரவேசித்தவர் ஆவார்.

இரண்டாவது : தொழுகையை நிலைநாட்டுதல், ஏனெனில் இரு சாட்சியங்களுக்குப் பிறகு தொழுகைதான் மகத்தான தூணாகும். இதனால்தான் நபியவர்கள் இவ்விரண்டிற்கும் அடுத்து தொழுகையைக் கூறியுள்ளார்கள்.

மூன்றாவது : ஸகாத், இது சொத்துக்களிலிருந்து இஸ்லாமிய ஷரீஅத் வரையறுத்த ஓரளவை தானமாக வழங்குவதாகும். இதனை வறியோர், ஏழைகள் போன்ற தேவையுடையோருக்கு வழங்குவது ஒரு முஸ்லிமுக்கு அவசியமாகும்.

நான்காவது : ரமழானில் நோன்பு நோற்றல். விதிவிலக்கு அளிக்கப்பட்டவர்களைத் தவிர ஏனைய அனைத்து முஸ்லிம்களும் ரமழான் மாதம் முழுதும் தினமும் நோன்பு நோற்க வேண்டும்.

ஐந்தாவது : அல்லாஹ்வின் புனித இல்லத்தை நாடிச் சென்று ஹஜ் செய்தல். அதற்கான வசதி, வாய்ப்புக்கள் உள்ளோர் தமது வாழ்வில் ஒரு தடவையேனும் ஹஜ் செய்வது அவசியமாகும்.

இவ்வைந்து தூண்களின் மீதே இஸ்லாம் நிறுவப்பட்டுள்ளது. இவற்றின் விரிவான சட்டங்கள், ஒழுக்கங்கள் அடிப்படைக் கொள்கை மற்றும் சட்டக்கலை நூல்களில் கூறப்பட்டுள்ளன.

# 2

நபி (ஸல்) அவர்களிம் பெரும்பாவங்கள் பற்றி வினவப்பட்டது, அப்போது : "அல்லாஹ்விற்கு இணை வைத்தல், பெற்றோரைத் துன்புறுத்தல், கொலை, பொய்ச் சாட்சியம் கூறல் என்பன ஆகும்" எனக் கூறினார்கள்.

*அறிவிப்பவர் : அனஸ் பின் மாலிக் (ரலி).*

*ஆதாரம் : புஹாரி, முஸ்லிம்.*[1]

## விளக்கவுரை

இந்நபி மொழியில் நான்கு விடயங்களை நபியவர்கள் எமக்கு அறிவிக்கின்றார்கள். அவை பெரும் பாவங்களில் உள்ளதாகும். இந்நபிமொழியில் நபி (ஸல்) அவர்கள் கூறிய பெரும்பாவங்கள் நான்கு.

1. அல்லாஹ்வுக்கு இணைவைத்தல்: ஏனெனில் அல்லாஹ்வுக்கு இணைவைத்தல் ஒரு முஸ்லிமை இஸ்லாத்திலிருந்து வெளியேற்றி இறை நிராகரிப்பில் நுழைவித்து விடுகின்றது. மேலும் நரகில் நிரந்தரமாக இருக்க இது காரணமாகின்றது. அல்லாஹ் கூறுகின்றான் : "நிச்சயமாக மர்யமுடைய மகனாகிய மஸீஹ் (ஈஸா) தான் அல்லாஹ்" என்று கூறுகிறவர்கள் உண்மையிலேயே நிராகரிப்பவர்கள் ஆகிவிட்டார்கள்; ஆனால் மஸீஹ் கூறினார்: "இஸ்ராயீலின் சந்ததியினரே! என்னுடைய இறைவனும், உங்களுடைய இறைவனுமாகிய அல்லாஹ்வை வணங்குங்கள்" என்று. எனவே

---

*(1) ஸஹீஹுல் புஹாரி- அத்தியாயம் : சாட்சியங்கள், பாடம் : பொய்ச்சாட்சியம் பற்றி வந்துள்ள செய்தி- (2653), ஸஹீஹ் முஸ்லிம்- அத்தியாயம் : இறைநம்பிக்கை- (88).*

*எவனொருவன் அல்லாஹ்வுக்கு இணை கற்பிப்பானோ அவனுக்கு அல்லாஹ் சுவனபதியை நிச்சயமாக ஹராமாக்கிவிட்டான், மேலும் அவன் ஒதுங்குமிடம் நரகமேயாகும், அக்கிரமக்காரர்களுக்கு உதவி புரிபவர் எவருமில்லை". (மாஇதா : 72ø*

2. பெற்றோரைத் துன்புறுத்தல்: இவ்விருவரையும் வெறுத்தல், தொடர்பைத் துண்டித்தல், சொல், செயல்களால் நோவினை செய்தல், அதேபோன்று அவ்விருவருக்கும் கட்டுப்படாமலிருத்தல், பல்வேறு விதங்களில் அவர்களுடன் மோசமாக நடத்தல் போன்ற அனைத்தும் அவர்களைத் துன்புறுத்துவதில் அடங்குகின்றன.

3. கொலை: இஸ்லாத்தில் பாதுகாப்பு உத்தரவாதமுள்ள ஓர் உயிரைக் கொல்வது பாரியதொரு பாவமாகும். இது அல்லாஹ்வின் கோபத்திற்கும், நரகில் நுழைவதற்கும் காரணமாகின்றது. அல்லாஹ் கூறுகின்றான் : *"எவனேனும் ஒருவன், ஒரு முஃமினை வேண்டுமென்றே கொலை செய்வானாயின் அவனுக்கு உரிய தண்டனை நரகமே ஆகும். என்றென்றும் அங்கேயே தங்குவான். அல்லாஹ் அவன் மீது கோபம் கொள்கிறான்; இன்னும் அவனைச் சபிக்கிறான். அவனுக்கு மகத்தான வேதனையையும் (அல்லாஹ்) தயாரித்திருக்கிறான்". (நிஸா : 93).*

4. பொய்ச்சாட்சி: யார் பிறரைப் பற்றி பொய்ச்சாட்சியம் கூறுகின்றாரோ அவர் மிக மோசமான வார்த்தையைப் பேசி விட்டார், பெரும் பாவங்களில் ஒன்றைச் செய்து விட்டார்.

ஒரு முஸ்லிம் தனது அனைத்து நிலைகளிலும் உண்மையாளனாக இருப்பது அவசியமாகும். சாட்சியமளிப்பதும் அதிலுள்ளதாகும். நீதிவானிடமோ, வேறு யாரிடமோ ஏதாவதொரு விடயத்தில் சாட்சியமளிக்கக் கோரப்பட்டால் உண்மை, சத்தியத்தை வைத்தே சாட்சியமளித்தல் வேண்டும். பெரும்பாவங்களில் வீழ்ந்திடாமலிருக்க பொய், மற்றும் பொய்ச் சாட்சிய்களைத் தவிர்க்க வேண்டும்.

# 3

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "யாருடைய நாவிலிருந்தும், கரத்திலிருந்தும் ஏனைய முஸ்லிம்கள் ஈடேற்றமடைகின்றார்களோ அவனே உண்மையான முஸ்லிமாவான்".

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் அம்ர் பின் ஆஸ் (ரலி).

ஆதாரம் : புஹாரி, முஸ்லிம்.(1)

## விளக்கவுரை

ஒரு முஸ்லிம் தனது இஸ்லாத்தில் சிலவேளை பலமானவனாகவும், வேறு சில வேளை பலவீனமானவனாகவும் இருப்பான். அதே போன்றுதான் ஒரு விசுவாசியும் தனது இறைநம்பிக்கையில் சிலவேளை பலமானவனாகவும் வேறு சிலவேளை பலவீனமானவனாகவும் இருப்பான்.

பலமான, பரிபூரணமான, முழுமையான இஸ்லாமுடையவன் தான் உண்மை முஸ்லிமாவான். அவனுடைய இஸ்லாம் தான் அல்லாஹ் நேசித்து பொருத்திக் கொள்ளக் கூடிய முழுமையான இஸ்லாமாகும்.

தனது நாவையும், கரத்தையும் பாதுகாப்பவனே உண்மையான முஸ்லிமென நபி (ஸல்) அவர்கள் இந்நபிமொழியில் எமக்குக்

---

(1) ஸஹீஹுல் புஹாரி- அத்தியாயம் : இறைநம்பிக்கை, பாடம் : யாருடைய நாவிலிருந்தும், கரத்திலிருந்தும் ஏனைய முஸ்லிம்கள் ஈடேற்றமடைகின்றார்களோ அவனே உண்மையான முஸ்லிமாவான் - (10), ஸஹீஹ் முஸ்லிம்- அத்தியாயம் : இறைநம்பிக்கை-(41).

கூறியுள்ளார்கள். எனவே அவன் தனது நாவினாலோ, கரத்தினாலோ முஸ்லிம்களை நோவினைப்படுத்த மாட்டான்.

அவர்களை அவன் ஏச மாட்டான், அவர்களைப் பற்றிப் புறம் பேச மாட்டான், நாவினால் அவர்களுக்குத் தீங்கு செய்ய மாட்டான், அடிக்கவோ, அநீதியிழைக்கவோ, கரத்தினால் அத்து மீறவோ மாட்டான்.

முஸ்லிம்கள் இவனுடைய நாவிலிருந்தும், கரத்திலிருந்தும் ஈடேற்றம் அடைவதே இஸ்லாம் முழுமையடைந்த ஒருவனின் பண்பாகும்.

நாவினாலோ, கரத்தினாலோ முஸ்லிம்களுக்குத் தீங்கிழைத்தவன் அரைகுறை இஸ்லாத்துடனும், பலவீனமான விசுவாசத்துடனும் அல்லாஹ்வால் பொருந்திக் கொள்ளப்படாதவனாகவும் இருக்கின்றான்.



# 4

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "நயவஞ்சகனின் அடையாளங்கள் மூன்றாகும்: பேசினால் பொய்யுரைப்பான், வாக்களித்தால் மாறு செய்வான், நம்பப் பட்டால் துரோகம் செய்வான்".

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : புஹாரி, முஸ்லிம்.[1]

## விளக்கவுரை

நயவஞ்சகர்கள் அல்லாஹ்வின் படைப்புகளில் மிக மோசமானவர்களாகும். மறுமையில் அவர்களது நிலை பற்றி அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான்: "நிச்சயமாக இந்நயவஞ்சகர்கள் நரகத்தின் மிகவும் கீழான அடித் தளத்தில்தான் இருப்பார்கள்; அவர்களுக்கு உதவியாளராக எவரையும் நீர் காண மாட்டீர்". (நிஸா : 145)

இந்நபிமொழியில் நயவஞ்சகர்களுடைய மூன்று அடையாளங்களை நபி (ஸல்) அவர்கள் எமக்குக் கூறியுள்ளார்கள். இவ் அடையாளங்களை நாம் தவிர்ந்து கொண்டு எச்சரிக்கையாக இருப்பதற்காகவே நபியவர்கள் எமக்கு இதனைக் கூறியுள்ளார்கள்.

1. முதல் அடையாளம் : பொய் பேசுதல்
2. இரண்டாம் அடையாளம் : வாக்கு மாறுதல்.

---

(1) ஸஹீஹுல் புஹாரி- அத்தியாயம் : இறைநம்பிக்கை, பாடம் : நயவஞ்சகனின் அடையாளம்- (33), ஸஹீஹ் முஸ்லிம்- அத்தியாயம் : இறைநம்பிக்கை- (59).

(3) மூன்றாம் அடையாளம் : நம்பிக்கைத் துரோகம் செய்தல்.

இம்மூன்றும் பண்புகளும் நயவஞ்சகர்களுடைய பண்புகளாகும். விசுவாசி பேசினால் உண்மையே பேசுவான். பொய்யுரைக்க மாட்டான்.

யாருக்காவது வாக்குறுதி அளித்தால் அந்த வாக்கை மீற மாட்டான். மாறாக அதனை நிறைவேற்றி விடுவான்.

அவனிடம் யாராவது அமானிதமாக ஒன்றை ஒப்படைத்தால் திருப்பிக் கேட்கும் போது தயக்கமோ, தாமதமோ, இழுத்தடிப்போ இன்றி அந்த அமானிதத்தை உரியவரிடம் ஒப்படைத்து விடுவான்.

அதே போன்றுதான் அவனிடம் ஒரு நபர் ஒரு தகவலை, அல்லது இரகசியத்தைக் கூறி அதனை மறைக்கும் படி வேண்டினால் யாரிடமும் கூறாது அதனை மறைத்து விடுவான். ஏனெனில் இரகசியத்தை அம்பலப் படுத்துவது நம்பிக்கைத் துரோகத்தில் ஒரு பகுதியாகும். அதிலிருந்து அல்லாஹ் எம்மைப் பாதுகாப்பானாக!



# 5

*நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "விசுவாசியான மனிதனுக்கும், இணைவைப்பு, இறை நிராகரிப்புக்கும் இடையிலுள்ள வேறுபாடு தொழுகையை விடுவதாகும்".*

*அறிவிப்பவர் : ஜாபிர் பின் அப்துல்லாஹ் (ரலி).*

*ஆதாரம் : முஸ்லிம்.(1)*

## விளக்கவுரை

"உண்மையாக வணங்கப்படத் தகுதியானவன் அல்லாஹ்வைத் தவிர வேறுயாருமில்லை, முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர்" என்ற இரு சாட்சியங்களுக்குப் பின்னால் இஸ்லாத்தில் மகத்தான தூண் தொழுகையாகும். இதனால் தான் அதனை நிலை நாட்டுமாறு ஏவலும், விட வேண்டாமென்ற தடையும் பல இறை வசனங்கள், மற்றும் பல நபிமொழிகளில் வந்துள்ளன.

தொழுகை விடயத்தில் அலட்சியமாக இருப்பதன் விபரீதத்தை இந்நபிமொழி எமக்கு அறிவிக்கின்றது. விசுவாசியான மனிதனுக்கும், இறை நிராகரிப்பு இணைவைப்புக்கும் இடையில் தொழுகையை விடுவதைத் தவிர வேறு வித்தியாசமில்லை என நபியவர்கள் தெளிவு படுத்தியுள்ளார்கள். அதனை விட்டால் குப்ர், ஷிர்க்கின் பால் கொண்டு சென்று விடும். அல்லாஹ் அதிலிருந்து

(1) ஸஹீஹ் முஸ்லிம்- அத்தியாயம் : இறைநம்பிக்கை- (82).

நம்மைப் பாதுகாப்பானாக!

தொழுகையை விடுவது நன்மைகளை அழிக்கக் கூடிய பெரும் பாவங்களில் ஒன்றாகும் என்பதற்கு இதில் தெளிவான ஆதாரமுண்டு. வட்டி, விபச்சாரம், திருட்டு, மதுப் பாவனை போன்றன பெரும் பாவங்களாக இருந்தாலும் தொழுகையை விடுவது அவற்றை விட கடுமையான பாவமாகும்.

எனவே தொழுகையில் அதிக அக்கறை செலுத்தி, பாரிய கவனம் செலுத்துவது ஒவ்வொரு முஸ்லிமான ஆண், பெண் மீதும் அவசியமாகும். அதனை நிறைவேற்றுவது பல நலவுகள், அபிவிருத்தி, வாழ்வாதாரங்கள் கிடைக்கக் காரணமாவதுடன், சுவனம், பாவமன்னிப்பு, அல்லாஹ்வின் திருப்தி ஆகியவற்றுக்கான வழியாகவும் உள்ளது.[2]



(2) தொழுகையின் நேரங்களை அறிவது ஒவ்வொரு முஸ்லிமினதும் பாரிய கடமையாகும். அதன் நேரத்தை அறிவது மகத்தான ஒரு செயலாகும். ஒரு தொழுகை நேரம் முடியும் வரை அதனைப் பிற்படுத்தியவர் மகா பாதகச் செயலொன்றைச் செய்தவராவார். மிகப் பெரிய பாவங்களுள் ஒன்றைச் செய்தவராவார்.

# 6

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "பலவீனமான விசுவாசியை விட பலமான விசுவாசியே மிகச் சிறந்தவனாகவும், அல்லாஹ்வின் நேசத்திற்குரியவனாகவும் உள்ளான். அனைவரிலும் நலவுண்டு".

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : முஸ்லிம்.[1]

## விளக்கவுரை

எமது அனைத்து விடயங்களிலும் பலமிக்கவர்களாக இருக்குமாறு நபி (ஸல்) அவர்கள் சுருக்கமான இவ்வார்த்தைகளில் ஊக்குவிக்கின்றார்கள். அல்லாஹ்வின் மீதான எமது நம்பிக்கை, உறுதி, அவனது மார்க்கத்தைப் பின்பற்றுதல், மார்க்கத்தில் உறுதியாக இருத்தல், ஷரீஅத் கல்வி கற்றல், போருக்கு தயார்படுத்துதல் மற்றும் இம்மை, மறுமை இரண்டிலும் எமக்குப் பயனளிக்கும் அனைத்திலும் பலமானவர்களாக இருக்குமாறு ஊக்குவிக்கின்றார்கள்.

பலவீனமான விசுவாசியை விட பலமான விசுவாசியே மிகச் சிறந்தவனாகவும், அல்லாஹ்வின் நேசத்திற்குரியவனாகவும் உள்ளான்" என்ற இவ்வார்த்தையே அதன் சிறப்பால், ஊக்குவிப்பால், தூண்டுவதால் போதுமானதாகும்.

பலமான விசுவாசி என்பவர் (தனது இறை நம்பிக்கையில் பலமானவர், தனது நாட்டங்களில் பலமானவர், தனது முயற்சி, செயற்பாடுகளில்

(1) ஸஹீஹ் முஸ்லிம்- அத்தியாயம் : விதி- (2664).

*பலமானவர் ஆகும்)* [(2)]

*இதனடிப்படையில் விசுவாசிகளான ஆண், பெண்கள் அனைவரும் தம்மால் முடிந்தவரை ஈமானைப் பலப்படுத்தும் அனைத்து வழிமுறைகளையும் பயன்படுத்தி அதனைப் பலப்படுத்த முயற்சிக்க வேண்டும். அல்லாஹ்விடம் தம்மை நெருக்கமாக்கும் நற்செயல்களின் படிகளில் முன்னேறிச் செல்ல தமது முயற்சிகளைப் பலப்படுத்த வேண்டும். வாழ்க்கையின் சுமைகள், சிரமங்களைத் தாங்கிக் கொள்ள ஆளுமையை வளர்த்துக் கொள்ள வேண்டும். தமக்கும், சமூகத்திற்கும் பயனளிக்கும் கலைகள், பயனுள்ள அனுபவங்களை அதிகப்படுத்துவதன் மூலம் தம்மை வளர்த்துக் கொள்ள வேண்டும்.*

*"அனைவரிலும் நலவு உண்டு" எனும் வார்த்தை ஒரு முக்கிய விடயத்தை சுட்டிக்காட்டுகின்றது. அது என்னவெனில் ஒரு விசுவாசி பலமானவனாக இருந்தாலும், பலவீனமானவனாக இருந்தாலும் அவன் நலவில்தான் உள்ளான் என்பதாகும். ஏனெனில் ஈமான் ஒரு மகத்தான விடயமாகும். நலவு உருவாக அதுவே போதுமானதாகும். இருந்தாலும் சிறந்தவன், அல்லாஹ்வுக்கு மிக நேசமானவன் போன்ற தனிச் சிறப்புக்களால் பலமானவன் பலவீனமானவனை விட தனித்து நிற்கின்றான்.*

---

*(2) அடைப்புக் குறிக்குள் உள்ளவை அஷ்ஷேக் முஹம்மத் பின் ஸாலிஹ் அல்உஸைமீன் (ரஹ்) அவர்களின் வார்த்தையாகும். "நாம் ஒவ்வொரு பொருளையும் நிச்சயமாக (குறிப்பான) அளவின்படியே படைத்திருக்கின்றோம்". (கமர் : 49) என்ற வசனத்தின் விளக்கத்திலேயே இதனைக் கூறியுள்ளார்கள். (தப்ஸீருல் குர்ஆன் - ஸூரா ஹதீத் முதல் ஹுஜுராத் வரை – தாருஸ் ஸுரய்யா வெளியீடு).*

# 7

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "தொழுகைக்காக வுழூச் செய்து, பின் கடமையான தொழுகைக்காக நடந்து சென்று அதனைக் கூட்டாக நிறைவேற்றியவரின் பாவங்களை அல்லாஹ் மன்னிக்கின்றான்".

அறிவிப்பவர் : உஸ்மான் பின் அப்பான் (ரலி).

ஆதாரம் : முஸ்லிம் (1)

## விளக்கவுரை

மகத்தான ஒரு நற்செயலைப் பற்றி நபி (ஸல்) அவர்கள் இந்நபிமொழியில் எமக்கு அறிவிக்கின்றார்கள். அதைச் செய்பவருக்கு அல்லாஹ் மதிப்பான கூலி வழங்குகின்றான். அதுதான் பாவமன்னிப்பாகும்.

இந்நற்செயல் தொழுகையுடன் தொடர்புடையது. அல்லாஹ்வை நெருங்கும் நோக்கில் ஒரு முஸ்லிம் மேற்கொள்ளும் மூன்று விடயங்கள் மூலம் இந்நற்செயல் உருவாகின்றது.

1. முதலாவது : வுழூவைப் பரிபூரணமாகச் செய்தல். வுழூவின் ஒவ்வோர் உறுப்பிற்கும் முழுமையாக நீர் சென்றடையும் விதத்தில் முழுமையாக, பரிபூரணமாக அதனைச் செய்தல் வேண்டும்.

---

(1) ஸஹீஹ் முஸ்லிம்- அத்தியாயம் : சுத்தம்- (223).

2. இரண்டாவது : கடமையான ஐவேளைத் தொழுகையை நிறைவேற்றும் நோக்கில் பள்ளிவாயலுக்கு நடந்து செல்லல்.

3. மூன்றாவது : கடமையான தொழுகையை முஸ்லிம்களுடன் சேர்ந்து கூட்டாக நிறைவேற்றுதல்.

எனவே வுழூவைப் பரிபூரணமாகச் செய்து, பள்ளிக்கு கால்நடையாகச் சென்று, தொழுகையை ஜமாஅத்தாக நிறைவேற்றியவருக்கு இம்மகத்தான கூலி கிடைக்கின்றது. அது அல்லாஹ்வின் பாவமன்னிப்பாகும். அல்லாஹ் யாருடைய பாவங்களை மன்னிக்கின்றானோ அவர் ஈருலகிலும் வெற்றி பெற்றவராவார்.



# 8

*நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "யார் என் மீது வேண்டுமென்றே பொய்யை இட்டுக்கட்டுகின்றாரோ அவர் நரகில் தமக்குரிய இடத்தை இப்போதே ஒதுக்கிக் கொள்ளட்டும்.".*

*அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).*

*ஆதாரம் : புஹாரி, முஸ்லிம்.[1]*

## விளக்கவுரை

நபிமொழிகளில் பொய்யுரைப்பது பெரும் பாவங்களில் ஒன்றாகும். அது மாபெரும் குற்றச் செயலாகும். யாராவது ஒரு வார்த்தையை சித்தரித்து அது நபி (ஸல்) அவர்களின் வார்த்தை எனக் கூறினால் அவர் மாபெரும் பொய்யை இட்டுக்கட்டியவர் ஆவார்.

நபி (ஸல்) அவர்கள் மீது புணையப்பட்ட ஒரு செய்தியை அது பொய்யெனத் தெளிவுபடுத்தாமல் பிறருக்கு அறிவிப்பவர் அத்துமீறி, அநீதியிழைத்தவராவார். நபியவர்களுடன் மிக மோசமாக நடந்து கொண்டவராவார்.

நபி (ஸல்) அவர்கள் மீது இட்டுக்கட்டப்பட்ட செய்திகள் மக்கள் மத்தியில் பரவியிருப்பது ஒரு துரதிஷ்டமே.

சில வேளைகளில் நன் நோக்கத்தில் இவ்வாறான பொய்யான

---

*(1) ஸஹீஹுல் புஹாரி- அத்தியாயம் : அறிவு, பாடம் : நபியவர்களின் மீது பொய் கூறுவதன் பாவம்- (110), ஸஹீஹ் முஸ்லிம்- அத்தியாயம் : முன்னுரை- (3).*

செய்திகளை சில நன்மக்களும் பரப்புவது இன்னும் துரதிஷ்டமே. இது பாரிய ஒரு பாவமாகும். இதை விட்டும் எச்சரிப்பதில் நாம் ஒன்றிணைந்து செயல்படுவது அவசியமாகும். நபி (ஸல்) அவர்கள் மீது பொய்யுரைப்பது தான் பொய்களில் மிக மோசமானதாகும்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: என் மீது பொய்யுரைப்பது பிறர் மீது பொய்யுரைப்பது போன்றல்ல. யார் என் மீது வேண்டுமென்றே பொய்யை இட்டுக்கட்டுகின்றாரோ அவர் இப்போதே நரகில் தனக்குரிய இடத்தை ஒதுக்கிக் கொள்ளட்டும்.(2) மேலும் கூறினார்கள் : பொய்யெனக் கருதிக் கொண்டே என்னைத் தொட்டும் ஒரு செய்தியைஅறிவித்தால்இருபொய்யர்களில்அவரும்ஒருவராவார்.(3)

நபியவர்களுக்கு சேர்க்க முன்னால் ஒரு செய்தியின் ஆதாரத் தன்மையை நாம் உறுதிப்படுத்திக் கொள்வது அவசியமாகும்.

ஹதீஸ் நூல்கள் மற்றும் நம்பகமான இணையத்தளங்களில் ஆராய்வதினூடாக ஹதீஸ்களை உறுதிப்படுத்துவதை இக்காலத்தில் அல்லாஹ் இலகுபடுத்தித் தந்திருப்பது அவன் எங்களுக்குச் செய்த பேருபகாரமாகும்.

அஷ்ஷேக் முஹம்மத் நாஸிருத்தீன் அல்பானீ (ரஹ்) அவர்களின் நூல்கள் இத்துறையில் மிகவும் பிரசித்தி பெற்றதாகும்.

ஸுன்னாவும் அதன் கலைகளும் என்ற இணையதளம், மற்றும் துரருஸ் ஸனிய்யா எனும் இணையதளத்திலுள்ள ஹதீஸ் களஞ்சியம் எனும் பகுதி போன்றன இணயங்களில் மிகவும் பிரசித்தி பெற்றதாகும்.

---

*(2) புஹாரி – அத்தியாயம் : ஜனாஸா, பாடம் : மரணித்தவருக்காக ஒப்பாரி வைப்பது வெறுக்கத்தக்கதாகும் (1291), முஸ்லிம் - முன்னுரை – (04), அறிவிப்பவர் : முகீரா பின் ஷுஃபா (ரலி).*

*(3) திர்மிதி – அத்தியாயம் : கல்வி, பாடம் : பொய்யெனக் கருதிக் கொண்டே ஒரு செய்தியை அறிவித்தல் (2662). இது ஹஸன், ஸஹீஹ் எனும் தரத்திலுள்ளதாக திர்மிதி அவர்கள் கூறியுள்ளார்கள்.*

# 9

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "தனது உள்ளத்தில் அனுவளவாயினும் பெருமை உள்ளவன் சுவனம் நுழைய மாட்டான்".

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி).

ஆதாரம் : முஸ்லிம்.(1)

## விளக்கவுரை

இஸ்லாம் சிறந்த நற்குணங்கள், உயரிய நன் நடத்தைகளின் மார்க்கமாகும். இதனால் தான் மென்மை, பணிவு, நளினத்தை அது ஏவியுள்ளதுடன் மமதை, பெருமை, கர்வம் போன்றவற்றைத் தடுத்துள்ளது.

மக்களை இழிவாகக் கருதி, அவர்கள் மீது கர்வம் கொள்ளும் பெருமையாளர்களுக்கு இந்நபிமொழியில் நபி (ஸல்) அவர்களிடமிருந்து எச்சரிக்கை உள்ளது. எனவே பெருமையாளர்கள் சுவனம் நுழைய முடியாது. அல்லாஹ் எம்மைப் பாதுகாப்பானாக!

நபி (ஸல்) அவர்களின் "தனது உள்ளத்தில் அனுவளவாயினும் பெருமை உள்ளவன் சுவனம் நுழைய மாட்டான்" என்ற மேற்கண்ட ஹதீஸின் அர்த்தம் என்னவெனில் அனுவளவாக

(1) ஸஹீஹ் முஸ்லிம்- அத்தியாயம் : இறைநம்பிக்கை- (147/ 91).

இருந்தாலும் பெருமை ஆபத்தான ஒரு விடயமாகும் என்பதே. இங்கு நபியவர்கள் கூறியிருப்பது மிகச் சிறிய அளவே.

பெருமையின் அர்த்தத்தை நபியவர்கள் மற்றுமொரு பொன்மொழியில் எமக்குத் தெளிவு படுத்தியுள்ளார்கள் : "பெருமை என்பது சத்தியத்தை ஏற்க மறுப்பதும், மக்களை இழிவாகக் கருதுவதுமாகும்" .

பெருமை ஹராம் என்பதை அறிவிக்கும் மற்றுமொரு நபிமொழி பின்வருமாறு உள்ளது : உள்ளத்திலே கர்வம் கொண்டு, பெருமையுடன் நடந்து செல்பவனுடன் அல்லாஹ் கோபித்த நிலையிலேயே அவனைச் சந்திப்பான்.[(2)]

பெருமை ஒரு பெரும் பாவம், மோசமான பண்பு என்பதை நாம் அறிந்தால் அதனைத் தவிர்ந்து கொள்வது அவசியமாகும். உபதேசங்களை ஏற்றுக் கொள்ளல், சத்தியத்திற்கு செவி சாய்த்தல், வறியவர்கள், பலவீனமானவர்கள், தேவையுடையவர்கள், பணியாட்கள் போன்றோரை நேசித்து, அவர்களுடன் மென்மையாகப் பழகுதல், கரிசனை எடுத்தல், அவர்களுக்காக பணிந்து செல்லல் போன்ற பெருமையை விட்டும் எம்மைத் தூரமாக்கக் கூடிய நற்செயல்களில் ஈடுபட வேண்டும். இதுபோன்றன உள்ளத்தைத் தூய்மைப்படுத்தி, மமதை, கர்வம், பெருமையை விட்டும் அதனை சுத்தப்படுத்துகின்றன.

---

*(2) முஸ்லிம் - அத்தியாயம் : இறைநம்பிக்கை (91), அறிவிப்பவர் : இப்னு மஸ்ஊத் (ரலி).*

# 10

*நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "அல்குர்ஆனைத் தானும் கற்று பிறருக்கும் கற்றுக் கொடுப்பவரே உங்களில் சிறந்தவராவார்".*

*அறிவிப்பவர் : உஸ்மான் பின் அப்பான் (ரலி).*

*ஆதாரம் : புஹாரி.*[1]

## விளக்கவுரை

*அல்குர்ஆனைக் கற்று, கற்பிப்பதன் அவசியத்தை இந்நபிமொழி அறிவிக்கின்றது. அல்குர்ஆனைத் தானும் கற்று, பிறருக்கும் கற்பிப்பவர்கள் தான் மக்களில் நல்லவர்கள், சிறந்தவர்கள் என நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள்.*

*உஸ்மான் (ரலி) அவர்களிடமிருந்து எமக்கு இந்நபிமொழியை அறிவித்த மதிப்பிற்குரிய தாபிஈயான அபூ அப்திர் ரஹ்மான் அஸ்ஸுலமி (ரஹ்) இந்நபிமொழியை அறிவித்து விட்டு "இது தான் என்னை இந்த இடத்தில் உட்கார வைத்தது"* [2] *என்றார்கள். அதாவது இந்நபிமொழியில் கூறப்பட்டுள்ள நலவு, சிறப்புகளை*

---

*(1) புஹாரி – அத்தியாயம் : அல்குர்ஆனின் சிறப்பு, பாடம் : அல்குர்ஆனைத் தானும் கற்று பிறருக்கும் கற்றுக் கொடுப்பவரே உங்களில் சிறந்தவராவார் (5027).*

*(2) புஹாரி – அத்தியாயம் : அல்குர்ஆனின் சிறப்பு, பாடம் : அல்குர்ஆனைத் தானும் கற்று பிறருக்கும் கற்றுக் கொடுப்பவரே உங்களில் சிறந்தவராவார் (5027), இப்னு ஹிப்பான் (1/325, இல 118) இவ்வார்த்தை இப்னு ஹிப்பானுக்குரியதாகும்.*

அடைந்து கொள்வதற்காக பத்திற்கும் மேற்பட்ட வருடங்களாக அல்குர்ஆனை ஓதிக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள்.

இதனடிப்படையில் அல்குர்ஆனில் கரிசனை எடுத்து, அதைக் கற்றல், மனனமிடுதல், உறுதியாகத் தக்கவைத்தல் என்பவற்றில் ஆர்வம் செலுத்தி, பின் பிறருக்கு அதனைக் கற்பிப்பதிலும் பங்கெடுப்பது அனைத்து முஸ்லிம்கள் மீதும் கடமையாகும்.

இது விடயத்தில் சிறந்த பயனுள்ள வழி : அல்குர்ஆனைக் கற்பதற்காக பள்ளிகள், பாடசாலைகள், கல்வி நிலையங்களில் இயங்கும் அல்குர்ஆன் மனனப் பிரிவுகளில் இணைவதாகும். இதனைச் செய்தவர் நன்மை, பிரகாசம், நேர்வழியில் இருக்கின்றார் என்பது அர்த்தமாகும்.



# 11

*நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "இரு வார்த்தைகள் உள்ளன. அவை நாவிற்கு இலகுவானவை, தராசில் கனமானவை, ரஹ்மானுக்கு மிக விருப்பமானவையாகும். அவை : "ஸுப்ஹானல்லாஹி வபிஹம்திஹீ, ஸுப்ஹானல்லாஹில் அழீம்" ஆகும்". (அல்லாஹ்வைத் துதித்து அவனைப் புகழ்கின்றேன், மகத்தான அல்லாஹ் தூய்மையானவன்)*

*அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).*

*ஆதாரம் : புஹாரி, முஸ்லிம்.*[1]

## விளக்கவுரை

நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வை அதிகமாக நினைவு கூர்வதை எமக்கு ஆர்வமூட்டியுள்ளார்கள். அதன் சிறப்பு, முக்கியத்துவத்தை தெளிவு படுத்தியுள்ளார்கள். காலை, மாலை நேரங்களிலும், உறங்கும் போதும், விழிக்கும் போதும் ஓதுவற்கான பல விதமான திக்ருகளை காட்டியுள்ளார்கள். அத்கார்கள் தொகுக்கப்பட்ட பிரத்தியேகமான நூல்களில் இதுபோன்ற திக்ருகள் உள்ளன. இமாம் நவவியின் "அல்அத்கார்", அஷ்ஷேக் இப்னு பாஸின் "துஹ்பதுல் அஃயார்", அஷ்ஷேக் கஹ்தானியின் "ஹிஸ்னுல் முஸ்லிம்" போன்ற பல நூல்களை இதற்கு உதாரணமாகக் கூறலாம்.

---

*(1) புஹாரி – அத்தியாயம் : சத்தியங்கள் மற்றும் நேர்ச்சைகள், பாடம் : இன்று நான் பேச மாட்டேன் என்று கூறிவிட்டு தொழுதால், ஓதினால்.... (6682), முஸ்லிம் - அத்தியாயம் : திக்ரு மற்றும் பிரார்த்தனை – (2694).*

ஸுப்ஹானல்லாஹ், வல்ஹம்துலில்லாஹ், வலா இலாஹ இல்லல்லாஹ், வல்லாஹு அக்பர், வலா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹ்.

மகத்தான இவ்விரு கலிமாக்களும் அவ்வாறான பொதுவான திக்ருகளில் உள்ளவையாகும்: ஸுப்ஹானல்லாஹி வபிஹம்திஹீ ஸுப்ஹானல்லாஹில் அழீம். இவ்விரு கலிமாக்களுக்கும் மூன்று தனித்துவங்கள் உள்ளதாக நபியவர்கள் கூறியுள்ளார்கள் :

(1) யூ யூ யூ நாவுக்கு இலகுவானவை : எனவே சிரமமின்றி அவ்விரண்டையும் அடிக்கடி மொழிவது மிக இலகுவாகும்.

(2) யூ யூ தராசில் இரண்டும் கனமானவை : அதாவது இவ்விரண்டையும் கூறியவருக்கு அல்லாஹ்விடத்தில் மகத்தான கூலியுண்டு. அதன் மூலம் அவ்வடியானுடைய நன்மைகளின் தட்டை நிரப்புவான்.

(3) யூ ரஹ்மானுக்கு மிக விருப்பமானவை : அதாவது இவ்விரு கலிமாக்களையும் அல்லாஹ் நேசிக்கின்றான். இவ்விரண்டும் எந்தளவு மகத்துவமானது, முக்கியமானது என்பதை இது பறைசாற்றுகின்றது.

இதனால்தான் இவ்விரு கலிமாக்களுக்கும், இதர பொதுவான கலிமாக்களுக்கும் அதிக முக்கியத்துவம் வழங்குவது அவசியமாகும். அல்லாஹ்விடம் மகத்தான கூலியைப் பெறுவதற்காக அனைத்து நேரங்களிலும், அனைத்து நிலைகளிலும் அதிகமாகக் கூறுவது அவசியமாகும்.

# 12

எனது தோழர் (ஸல்) அவர்கள் எனக்கு மூன்று விடயங்களை உபதேசித்தார்கள் : "ஒவ்வொரு மாதமும் மூன்று நாட்கள் நோன்பு நோற்றல், இரு ரக்அத்கள் ளுஹாத் தொழுதல், உறங்க முன் வித்ருத் தொழுதல்".

*அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).*

*ஆதாரம் : புஹாரி, முஸ்லிம்.*[1]

## விளக்கவுரை

அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களுக்கு மிக நெருக்கமான ஒரு கண்ணியமான நபித்தோழரரவார்.

நபியவர்கள் தமக்குச் செய்த உபதேசத்தை எமக்கு பின்வருமாறு விபரிக்கின்றார்கள் : சினேகிதத்திற்குப் பயன்படுத்தும் خليل ، حبيب ஆகிய இரு வார்த்தைகளில் உற்ற சினேகிதத்தை அறிவிக்கும் خليل எனும் வார்த்தையைப் பயன்படுத்தி "எனக்கு எனது உற்ற நண்பர் உபதேசித்தார்கள்" எனக் கூறுகின்றார்கள். ஆம், இவ்வார்த்தை حبيب எனும் வார்த்தையை விட மிகப் பொருத்தமானதும், பலமானதுமாகும்.

எனது உற்ற நண்பர் மூன்று விடயங்களை எனக்கு உபதேசித்தார் :

---

*(1) புஹாரி – அத்தியாயம் : நோன்பு, பாடம் : மாதத்தின் நடுப்பகுதியில் நோன்பு நோற்றல் (1981), முஸ்லிம் - அத்தியாயம் : பயணிகளின் தொழுகை மற்றும் அதனை சுருக்குதல் – (721).*

முதலாவது உபதேசம் : மாதாந்தம் மூன்று நோன்புகள் நோற்றல். இது சிறந்த நபி வழியும், மகத்தான கூலி கிடைக்கக் கூடியதுமாகும். இவ்வாறு மாதாந்தம் மூன்று தினங்கள் நோன்பு நோற்பது காலம் முழுதும் நோன்பு நோற்பது போன்றாகும் என நபி (ஸல்) அவர்கள் எமக்கு அறிவித்துள்ளார்கள்( ). இது அடியார்கள் மீதான அல்லாஹ்வின் தயாள குணமாகும்.

இங்கு நோன்பு எனக் குறிப்பிடப்பட்டிருப்பது ஸுன்னத்தான நோன்புகளையே. தொடர்ச்சியாகவோ, இடைக்கிடையோ மூன்று நாட்கள் நோற்க வேண்டும்.

இரண்டாவது உபதேசம் : ளுஹாத் தொழுகை. இது முற்பகல் வேளையில் தொழும் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட ரக்அத்களைக் கொண்ட தொழுகையாகும். எனவே குறித்த முற்பகல் நேரத்தில் இரண்டோ, நான்கோ அல்லது அதற்கு மேற்பட்ட எண்ணிக்கையிலோ தொழுவது ஸுன்னத்தாகும். இதன் கூலி பாரியதாகும், சிறப்பு மகத்தானதாகும்.

மூன்றாவது உபதேசம் : வித்ரு தொழுகை. ஸுன்னத்தான தொழுகைகளில் மிகவும் சிறந்தது வித்ருத் தொழுகையே. அதன் நேரம் இஷா தொழுகையுடன் ஆரம்பித்து, பஜ்ர் அதானுடன் முடிவடைகின்றது. ஒன்று, மூன்று, ஐந்து அல்லது அதற்கு மேற்பட்ட எண்ணிக்கையில் தொழ வேண்டும். ஒற்றைப்படையாக இத்தொழுகை அமைவதை கவனத்திற் கொள்ள வேண்டும். “وتر” என்ற வார்த்தையின் நோக்கமும் அதனை ஒற்றையாக நிறைவேற்றுவதே ஆகும்.

இவை தான் நபி (ஸல்) அவர்கள் அபூ ஹுரைரா (ரலி) அவர்களுக்கு செய்த உபதேசமாகும். இதனை எமது நேசத்திற்குரிய நபியவர்களிடமிருந்து எமக்கும் கிடைத்த உபதேசமாகவே நாம் எடுத்துக் கொள்ள வேண்டும்.

# 13

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "ஓர் அடியான் தனது இரட்சகனுக்கு மிக நெருக்கமாக இருப்பது அவன் ஸுஜூதிலிருக்கும் போதாகும். எனவே அதில் அதிகம் பிரார்த்தியுங்கள்".

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : முஸ்லிம்.[1]

## விளக்கவுரை

பல வகையான வணக்கங்கள், பல விதமான வழிபாடுகள் மூலம் தன்னை நெருங்குமாறு அல்லாஹ் தனது அடியார்களைப் பணித்துள்ளான்.

அல்லாஹ்விடம் நெருக்கமாகி வைப்பதில் மிக மகத்தானது கடமையான மற்றும் உபரியான தொழுகையாகும். ஒரு முஸ்லிம் தொழுகைக்குள் பிரவேசித்து விட்டால் அவன் அல்லாஹ்வுக்கு நெருக்கமானவனாகி விடுகின்றான்.

பொதுவாக தொழுகை முழுவதும் விசுவாசியை அல்லாஹ்விடம் நெருக்கமாக்கி வைக்கின்றதென்றாலும் அவன் ஸுஜூதில் இருக்கும் போது அல்லாஹ்வுக்கு மிக மிக நெருக்கத்தில் இருக்கின்றான். எனவே அடியான் ஸுஜூதில் அல்லாஹ்விற்குப் பணிந்து, அவனைத் துதித்து, பரிசுத்தப்

(1) முஸ்லிம் - அத்தியாயம் : தொழுகை – (482).

படுத்துகின்றான். உள்ளச்சம், இழிவு, தேவையுடைய நிலையில் அவன் அல்லாஹ்வை அழைத்துப் பிரார்த்திக்கின்றான்.

இதனால் தான் ஸுஜூதும் பிரார்த்தனை ஏற்கப்படும் சந்தர்ப்பங்களில் உள்ளதாகும். பிறிதொரு நபிமொழியில் நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறினார்கள் : ஸுஜூதைப் பொறுத்தவரை அதில் பிரார்த்தனையில் திளைத்திருங்கள். அது உங்களுக்கு பதிலளிக்கப் போதுமாகும்.(2) அதாவது எமது பிரார்த்தனை ஏற்கப்பட மிகப் பொருத்தமான இடமாகும்.

இதனால் ஸுஜூதை சற்று நீட்டி, பிரார்த்தனையை அதிகப்படுத்துவது விரும்பத்தக்கதாகும். ஸுஜூதும், பிரார்த்தனையும் ஈருலக வெற்றி மற்றும் நலவுகளுக்கான பிரதான காரணங்களில் உள்ளதாகும்.



*(2) முஸ்லிம், அத்தியாயம் : தொழுகை (479), அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி).*

# 14

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "ஒரு விசுவாசியை சபிப்பது அவனைக் கொல்வது போன்றாகும்".

அறிவிப்பவர் : ஸாபித் பின் ழஹ்ஹாக் (ரலி).

ஆதாரம் : புஹாரி, முஸ்லிம்.[1]

## விளக்கவுரை

சாபமிடுவது பாரியதொரு குற்றமாகும், பெரும் பாவங்களில் ஒன்றாகும்.

சாபமிடுவதை விட்டும் எமது நபி (ஸல்) அவர்கள் எம்மைப் பல நபிமொழிகளில் எச்சரித்துள்ளார்கள்.

"ஒரு விசுவாசியை சபிப்பது அவனைக் கொல்வது போன்றாகும்" என்ற இந்நபிமொழியும் அவற்றில் ஒன்றுதான்.

மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "அல்லாஹ்வின் சாபம், கோபத்தைக் கொண்டு நீங்கள் சாபமிட்டுக் கொள்ள வேண்டாம்".[2]

---

*(1) புஹாரி – அத்தியாயம் : நற்பண்புகள், பாடம் : நியாயமான காரணமின்றி தனது சகோதரனைக் காபிர் எனக் கூறியவன் (6105), முஸ்லிம் - அத்தியாயம் : இறைநம்பிக்கை – (110).*

*(2) அபூதாவூத், அத்தியாயம் : ஒழுக்கநெறி, பாடம் : சாபமிடுதல் (4902),*

மேலும்கூறினார்கள்: "சாபமிடுவதற்குரியதகுந்தகாரணமின்றி ஒரு பொருளை சபித்தால் அதன் சாபம் சபித்தவருக்கே மீண்டு விடும்".[(3)]

ஸலமா பின் அக்வஃ (ரலி) கூறினார்கள் : தனது சகோதரனை ஒருவர் சாபமிடுவதை நாம் கண்டால் பெரும் பாவங்களில் ஒன்றைச் செய்தவராகவே நாம் அவரைக் கருதுவோம்.[(4)]

முஸ்லிமை சபிப்பது பெரும்பாவங்களில் ஒன்றென அஷ்ஷேக் இப்னு பாஸ் (ரஹ்) கூறியுள்ளார்கள்.[(5)]

முஸ்லிம்கள் மத்தியில் சாபமிடும் வழக்கம் பரவியிருப்பது கவலைக்குரிய விடயமாகும். அல்லாஹ்வே போதுமானவன்.

இதனைத் தடுப்பது, எச்சரிக்கையாக இருப்பது, பிறரையும் இதனை விட்டும் கடுமையாக எச்சரிக்கை செய்வது அவசியமாகும்.

---

*திர்மிதி, நலவு செய்தல், உறவைப் பேணுதல், பாடம் : சாபமிடுவதைப் பற்றி வந்துள்ள செய்திகள் (1976), ஹாகிம் (1/111). இதனை ஸஹீஹ் எனக் கூறியுள்ளார்கள். அறிவிப்பவர் : ஸமுரா பின் ஜுன்துப் (ரலி).*

*(3) அபூதாவூத், அத்தியாயம் : ஒழுக்கநெறி, பாடம் : சாபமிடுதல் (4908), திர்மிதி, நலவு செய்தல், உறவைப் பேணுதல், பாடம் : சாபமிடுவதைப் பற்றி வந்துள்ள செய்திகள் (1978), இப்னு ஹிப்பான் (அல்இஹ்யான் 11/55/இல 5745), அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி).*

*(4) தபரானியின் அல்முஃஜமுல் அவ்ஸத் 6/380 (6674).*

*(5) அஷ்ஷேக் இப்னு பாஸின் பத்வாத் தொகுப்பு (7/148).*

# 15

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "அல்லாஹ் கூறுகின்றான் : மனிதனே நீ நல்ழியில் செலவு செய், நான் உனக்கு செலவு செய்வேன்".

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : புஹாரி, முஸ்லிம்.[1]

## விளக்கவுரை

விசுவாசிகளை சிலாகித்துக் கூறும் போது அல்லாஹ் வர்ணித்துள்ள மகத்தான பண்பு அவனது பாதையில் செலவு செய்வதாகும். அவன் கூறுகின்றான் : "அலிஃப், லாம், மீம். இது, (அல்லாஹ்வின்) திருவேதமாகும்; இதில் எத்தகைய சந்தேகமும் இல்லை; பயபக்தியுடையோருக்கு (இது) நேர்வழிகாட்டியாகும். (பயபக்தியுடைய) அவர்கள், (புலன்களுக்கு எட்டா) மறைவானவற்றின் மீது நம்பிக்கை கொள்வார்கள்; தொழுகையையும் கடைப்பிடிப்பார்கள்; இன்னும் நாம் அவர்களுக்கு அளித்தவற்றிலிருந்து (நல்வழியில்) செலவும் செய்வார்கள்." (பகரா : 1 – 3)

செலவளித்தல் என்பது பல விடயங்களைப் பொதிந்துள்ளது : தனது

---

(1) புஹாரி – அத்தியாயம் : அல்குர்ஆன் விளக்கவுரை, பாடம் : "அவனது அர்ஷ் நீரின் மீது இருந்தது" எனும் இறைவசனம் (4684), முஸ்லிம் - அத்தியாயம் : ஸகாத் – (993). இவ்வார்த்தை முஸ்லிமில் இருந்து பெறப்பட்டதாகும்.

மனைவி குழந்தைகளுக்கு செலவளித்தல், ஏழை, எளியவர்களுக்கு தானமளித்தல், அல்குர்ஆன் பிரதிகள் பகிர்தல், பயனுள்ள நூல்களை விநியோகித்தல், நோயாளிகளுக்கான சிகிச்சை போன்ற பல நற்காரியங்களில் செலவளித்தல்.

இந்நபிமொழியில் நல்ல விடயங்களில் செலவு செய்வோருக்கு அல்லாஹ் ஒரு வாக்குறுதி அளித்துள்ளான் : அல்லாஹ் அவனுக்காக செலவு செய்தல், அவனுடைய அருள்களை வழங்குதல், அவனது கொடைகளிலிருந்து பிரதியுபகாரம் செய்தல் என்பதே அவ்வாக்குறுதியாகும். அல்லாஹ் கூறுகின்றான் : "நிச்சயமாக என் இறைவன் தன் அடியார்களில் யாருக்கு நாடுகிறானோ, அவருக்கு செல்வத்தை விசாலப்படுத்துவான்;. இன்னும் தான் நாடியோருக்கு சுருக்கியும் விடுகிறான்;. ஆகவே நீங்கள் எந்தப் பொருளை(அல்லாஹ்வின் பாதையில்) செலவு செய்த போதிலும், அவன் அதற்குப் பிரதிபலன் அளிக்கிறான்;. மேலும், அவன் கொடையாளிகள் அனைவரிலும் மிகவும் மேலானவன்" என்று (நபியே!) நீர் கூறும். (ஸபஃ : 39)

குடும்பத்தினர், பெற்றோர், உறவினர்கள், வறியவர்கள், தேவையுடையவர்கள் போன்றோருக்கு செலவளித்தால், அல்லது வேறு பல நல்ல வழிகளில் செலவு செய்தால் அல்லாஹ் அவருக்கு நற்கூலி எழுதுகின்றான். செலவு செய்ததற்குப் பிரதியாக வாழ்வாதாரமளிக்கின்றான். இது அல்லாஹ்வின் பேரருளாகும். தான் நாடியோருக்கு அதனை வழங்குகின்றான். அல்லாஹ் மகத்தான அருளுக்குரியவனாகும்.



# 16

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "ஒரு முஸ்லிமைத் தைக்கும் முள் உள்பட அவருக்கு நேரிடும் துன்பம், நோய், துக்கம், கவலை, தொல்லை, மனவேதனை ஆகிய எதுவாயினும் அதற்கு பதிலாக அவரின் பாவங்களிலிருந்து சிலவற்றை அல்லாஹ் மன்னிக்காமல் இருப்பதில்லை".

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : புஹாரி, முஸ்லிம்.(1)

## விளக்கவுரை

மனிதன் இவ்வுலகில் பல கஷ்டங்கள், சிரமங்கள், கவலைகள், துக்கங்களுக்கு உட்படுகின்றான். இந்நபிமொழியில் நபி (ஸல்) அவர்கள் நாம் எமது எல்லா நிலைகளிலும் நினைவுபடுத்த வேண்டிய மகத்தான ஒரு விடயத்தைக் கூறுகின்றார்கள். இது உள்ளத்தை மகிழ்விக்கக் கூடிய, ஆத்மாவை ஆறுதல்படுத்தக் கூடிய, அமைதியை வரவழைக்கக் கூடிய ஒரு விடயமாகும்.

இது என்னவெனில், ஒரு முஸ்லிமுக்கு ஏற்படும் கஷ்டம், நோய், துக்கம், துன்பம், கவலை நோவினை எதுவாக இருந்தாலும் அதனை அல்லாஹ் குற்றப்பரிகாரமாக ஆக்காமல் இருப்பதில்லை. இத்துன்பங்கள் பாவங்கள் மன்னிக்கப்பட்டு, அழிக்கப்பட்டு, நீக்கப்படுவதற்குக் காரணமாகின்றன. எனவே

---

(1) புஹாரி – அத்தியாயம் : நோயாளிகள், பாடம் : நோயின் குற்றப்பரிகாரம் (5641), முஸ்லிம் - அத்தியாயம் : நலவு செய்தல், உறவைப் பேணுதல், நற்பண்புகள் – (2573).

இவன் தனது பாவங்கள், தவறுகளிலிருந்து தூய்மையாகி, இரட்சகனுக்கு நெருக்கமான நிலையில் இத்துன்பங்களிலிருந்து வெளியேறுகின்றான்.

"தைக்கும் முள் உள்பட" எனும் வார்த்தை மனிதனுக்கு ஏற்படும் துன்பம் முள் குத்துவது போன்ற அற்பமானதாக இருந்தாலும் அதுவும் குற்றப் பரிகாரமாகின்றது என்பதற்கு ஆதாரமாகின்றது.

இதனை அறியும் ஒரு முஸ்லிம் அல்லாஹ்வின் அருளை நினைத்து சந்தோஷப்படவும். எப்போதுமே பொறுமையுடனும், நன்மையை எதிர்பார்த்து, அல்லாஹ்வின் ஏற்பாட்டில் திருப்தி கொள்வதில் ஆர்வம் காட்ட வேண்டும். அல்லாஹ்வின் ஏற்பாட்டில் திருப்தியடைந்தால் அல்லாஹ் அவனைக் கண்டு திருப்தியடைகின்றான். அவனை கண்ணியப்படுத்தி, அருள்கள் பல பொழிந்து வாரி வழங்குகின்றான்.



# 17

நபி(ஸல்) அவர்கள்கூறினார்கள்: "நீங்கள்இறைநம்பிக்கை கொள்ளாதவரையில் சொர்க்கத்தில் நுழைய முடியாது. நீங்கள் ஒருவரை ஒருவர் நேசிக்காதவரை (முழுமையான) இறைநம்பிக்கையாளராக முடியாது. ஒன்றை உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா? அதை நீங்கள் செயல்படுத்தினால் ஒருவரை ஒருவர் நேசம் கொள்ளலாம்.உங்களிடையே சலாத்தைப் பரப்புங்கள்".

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : முஸ்லிம்.(1)

## விளக்கவுரை

மிக மிக முக்கியமான ஒரு விடயத்தின் பால் இந்த நபிமொழி எம்மைத் தூண்டுகின்றது. அதுதான் எமக்கு மத்தியில் பரஸ்பரம் நேசமுள்ளவர்களாக இருப்பதாகும்.

நாம் விசுவாசிகளாக ஆகும் வரை சுவனம் நுழைய மாட்டோம், எமக்கு மத்தியில் ஒருவரையொருவர் நேசிக்கும் வரை விசுவாசிகளாக ஆக மாட்டோம் என நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள்.

நாம் நேசர்களாக ஆகிட மிக இலகுவான சுலபமான ஒரு காரியம் உண்டு. அதனைச் செய்தால் எமக்கு மத்தியில் நேசம் பரவி விடும்.

---

(1) முஸ்லிம் - அத்தியாயம் : இறைநம்பிக்கை – (54).

இந்த இலகுவான காரியம் மக்களுக்கு மத்தியில் ஸலாதைப் பரப்புவதாகும்.

முஸ்லிம்களுக்கு மத்தியில் ஸலாமைப் பரப்புவது நேசம் உண்டாவதற்கான காரணமாகும். நேசம் உருவாகுதல் ஈமான் அதிகரிக்கக் காரணமாகும். ஈமான் அதிகரிப்பு சுவர்க்கம் நுழையக் காரணமாகும் என்பதை இந்நபிமொழியிலிருந்து நாம் அறிந்து கொண்டோம்.

அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மத்துல்லாஹி வபரக்காத்துஹூ எனக் கூறுவதே ஒரு முஸ்லிம் கூறும் ஸலாத்தில் முழுமையானதாகும்.

வஅலைகுமுஸ்ஸலாம் வரஹ்மத்துல்லாஹி வபரக்காத்துஹூ எனக் கூறுவதே ஸலாத்திற்கான சிறந்த பதிலாகும்.

அஸ்ஸலாமு அலைக்கும் என்றோ, அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மத்துல்லாஹ் என்றோ கூறினாலும் போதுமானதாகும். எனினும் முழுமையாகக் கூறுவதே மிகச் சிறந்ததாகும்.

எனவே ஸலாத்தைப் பரப்புவதில் கூச்சப்படாமல், அதிக கரிசனை எடுத்து, அக்கறையெடுப்பது அவசியமாகும். அது கூலி கிடைக்கவும், ஈமான் அதிகரிக்கவும், சுவனம் நுழையவும் காரணமாகும்.

# 18

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "ஓர் ஆடவர் மற்ற ஆடவருடையவோ, ஒரு பெண் மற்ற பெண்ணுடையவோ மறைவிடத்தைப் பார்க்க வேண்டாம்".

அறிவிப்பவர் : அபூ ஸஈத் அல்குத்ரீ (ரலி).

ஆதாரம் : முஸ்லிம்.[1]

## விளக்கவுரை

நாம் அறிந்து அவசியம் செயல்படுத்த வேண்டிய மிக முக்கியமான ஒரு விடயத்தை இந்நபிமொழி அறிவிக்கின்றது.

ஆணோ, பெண்ணோ மனிதன் எனும் போது அவன் அவசியம் மறைக்க வேண்டிய ஒரு பகுதி (அவ்ரத்) ஒவ்வொருவருக்கும் உண்டு. அதனை அவன் மறைப்பதும், அதனைப் பார்க்காமல் பிறர் பார்வையைத் தாழ்த்திக் கொள்வதும் அவசியமாகும்.

இரு ஆண்கள் அல்லது இரு பெண்களுக்கிடையிலே உள்ள தொடர்பிலேயே இந்த வரையறை எனில், ஆண், பெண்ணிற்கிடையிலான தொடர்பு எம்மாத்திரம்.

இதனை நாம் அறிந்தால் எமது அவ்ரத்களைப் பாதுகாப்பதும், பிறர் காணாமல் மறைப்பதும் அவசியமாகும். அவ்வாறு

(1) முஸ்லிம் - அத்தியாயம் : மாதவிடாய் – (338).

பார்த்தல், தொடுதல் மூலம் அதில் நாம் அலட்சியமாக இருந்து விடக்கூடாது. எந்தவொரு நிலையிலும் இதில் விட்டுக் கொடுப்போ, அலட்சியமோ, விளையாட்டுத் தனமோ பொருந்தாது என்பதையும் நாம் அறிந்து கொள்வது அவசியமாகும்.

# 19

ஸஃப் பின் ஜஸ்ஸாமா (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களுக்கு வேட்டையாடப்பட்ட ஒரு பிராணியை அன்பளிப்பாக வழங்கினார். நபியவர்கள் அதனைக் கையேற்காமல் திருப்பி விட்டார்கள். அவருடைய முகத்தில் கவலை தென்பட்டதை அவதானித்த நபியவர்கள் “நாம் இஹ்ராம் நிய்யத் வைத்த நிலையில் இருக்கின்றோம் என்பதனால்தான் இதனைத் திருப்பினோம்” என்றார்கள்.

அறிவிப்பவர் : ஸஃப் பின் ஜஸ்ஸாமா (ரலி).

ஆதாரம் : புஹாரி, முஸ்லிம்.(1)

## விளக்கவுரை

நபி (ஸல்) அவர்களுக்கு அன்பளிப்புகளை வழங்குவதை தோழர்கள் அதிகம் விரும்பக் கூடியவர்களாக இருந்தனர். அன்பளிப்புகளை ஏற்றுக் கொண்டு அதற்குப் பிரதி செய்வது நபி (ஸல்) அவர்களின் வழக்கமாகும்.

ஹஜ் பயணத்தின் போது நபியவர்களிடம் ஸஃப் பின் ஜஸ்ஸாமா என்ற ஒரு நபர் தம்முடன் வேட்டைப் பிராணி ஒன்றை அன்பளிப்பாக எடுத்து வந்தார். நபியவர்கள் உண்பதற்காகவே அவர் வேட்டையாடி இருந்தார். நபியவர்களோ இஹ்ராமுடன் இருந்ததால் அந்த அன்பளிப்பை ஏற்கவில்லை. இஹ்ராமுடன்

(1) புஹாரி – அத்தியாயம் : வேட்டையாடுவதன் பரிகாரம், பாடம் : இஹ்ராம் அணிந்த ஒருவருக்கு உயிருடன் மரை ஒன்று அன்பளிப்பு செய்யப்பட்டால் (1825), முஸ்லிம் - அத்தியாயம் : ஹஜ் – (1193).

*இருப்போருக்கு வேட்டைப் பிராணி தடுக்கப்பட்ட ஒன்றாகும்.*

*நபியவர்கள்அந்தஅன்பளிப்பைத்திருப்பியபோதுஅம்மனிதர் கவலைப்பட்டார். உணர்ச்சி வசப்பட்டார். உடனடியாக நபியவர்கள்: "நாம்இஹ்ராத்துடன்இருப்பதனால்தான்இதனைத் திருப்பினோம்" என காரணத்தைத் தெளிவுபடுத்திக் கூறினார்கள். காரணத்தைப் புரிந்து கொண்ட நபரின் உள்ளத்திலிருந்த கவலை நீங்கியது. இச்சம்பவத்தை தனது தோழர்கள், மாணவர்களிடமும் கூற ஆரம்பித்து விட்டார்.*

*இதிலிருந்து நாம் பெறும் பாடம் என்னவெனில், ஷைத்தான் எமக்குள் ஊடுருவ முன் சில விடயங்களில், காரணங்கள், நியாயங்களைத் தெளிவுபடுத்துவதில் விரைந்து செயற்படுவது அவசியமாகும். அல்லாஹ் கூறுகின்றான் : "(நபியே!) என் அடியார்களுக்கு அவர்கள் அழகியதையே சொல்ல வேண்டும் என்று கூறுவீராக! நிச்சயமாக ஷைத்தான் அவர்களுக்கிடையில் (தீயதைத் தூண்டி) விஷமஞ் செய்வான்" (அல்இஸ்ராஃ : 53)*

*உணர்வுகளை அரவணைத்து, உள்ளங்களை மகிழ்விப்பதும், நியாயங்களைத் தெளிவுபடுத்துவதும் நற்குணங்களில் உள்ளவையே என்பதைத் தெளிவுபடுத்துவதற்காக இமாம் நவவீ (ரஹ்) தனது "ரியாழுஸ் ஸாலிஹீன்" நூலில் நற்குணம் பற்றிய தலைப்பில் இச்செய்தியை பதிந்துள்ளார்கள்.*

# 20

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "கோள் சொல்பவன் சுவனம் நுழைய மாட்டான்".

அறிவிப்பவர் : ஹுதைபா பின் யமான் (ரலி).

ஆதாரம் : புஹாரி, முஸ்லிம்.(1)

## விளக்கவுரை

நாவினால் ஏற்படும் ஆபத்தை விட்டும் எம்மை எச்சரிக்கும் நபிமொழிகளில் இதுவும் ஒன்றாகும். நாவின் விபரீதங்கள் பல உள்ளன. புறம் பேசுதல், கோள் சொல்லித் திரிதல் போன்றன இவற்றுள் சிலவாகும்.

இமாம் நவவீ (ரஹ்) கூறினார்கள்: புறம், கோள் ஆகிய இவ்விரு விடயங்களும் மிக மோசமானவை, மக்களுக்கு மத்தியில் அதிக பரவலுடையவை. எந்தளவுக்கெனில் மிகக் குறைவானோரே அவ்விரண்டிலிருந்தும் தப்புகின்றனர் என்பதை அறிந்து கொள்ளும்.(2)

இந்த நபிமொழியில் நபி (ஸல்) அவர்கள் ஒரு தீய குணத்தைப்

---

*(1) புஹாரி – அத்தியாயம் : நற்பண்புகள், பாடம் : கோள் சொல்லுவது வெறுக்கத்தக்கதாகும் (6056), முஸ்லிம் - அத்தியாயம் : இறைநம்பிக்கை – (105).*

*(2) நூல் : அல்அத்கார், பக்கம் : 336.*

பற்றி, பெரும் பாவங்களில் ஒன்றாகக் கணிக்கப்படும் பாரிய ஒரு பாவத்தை விட்டும் எம்மைத் தடுக்கின்றார்கள். அதுதான் கோள் செல்வதாகும். நபியவர்கள் கூறினார்கள் : *"கோள் சொல்பவன் சுவனம் நுழைய மாட்டான்".*

*கோள் என்பது :* மக்களிடையே குழப்பங்களை உருவாக்கும் நோக்கில் செய்திகளைப் பரப்புவதாகும். பிரச்சினைகள், பிணக்குகள், பகைமைகள் உருவாக இதுவும் ஒரு காரணமாகும்.

கோள் சொல்வதை விட்டும் தானும் கடும் எச்சரிக்கையுடன் இருந்து, பிறரையும் எச்சரிக்கை செய்தல் அவசியமாகும். ஏனெனில் இது சுவனத்தை இழக்கச் செய்யும் ஒரு காரணி என்பதுடன் கப்ரில் வேதனை செய்யப்படவும் ஒரு காரணியாக உள்ளது.



# 21

*நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "முஸ்லிம் ஒருவர் ஒரு மரத்தை நட்டு அல்லது விதைவிதைத்து விவசாயம் செய்து, அதிலிருந்து (அதன் விளைச்சலை அல்லது காய்கனிகளை) ஒரு பறவையோ, ஒரு மனிதனோ அல்லது ஒரு பிராணியோ உண்டால் அதன் காரணத்தால் ஒரு தர்மம் செய்ததற்கான பிரதிபலன் அவருக்குக் கிடைக்கும்".*

*அறிவிப்பவர் : அனஸ் பின் மாலிக் (ரலி).*

*ஆதாரம் : புஹாரி, முஸ்லிம்*[1]

## விளக்கவுரை

விளைச்சல் மனித இனத்தின் முக்கிய தொழில்களில் ஒன்றாகும். உணவு கிடைக்கும் வழிகளில் அதுவும் ஒன்றாகும். சிலவேளை செல்வச்செழிப்புக்கான காரணமாகவும் அது அமைந்து விடுகின்றது.

ஒரு முஸ்லிம் ஏதாவதொன்றை பயிரிட்டு, அதிலிருந்து ஒரு மனிதனோ, பறவையோ, வேறு விலங்கோ உண்டால் அதனைப் பயிரிட்டவருக்கு தர்மமாக அல்லாஹ் எழுதுவது அவன் தனது அடியார்களுக்குப் புரிந்திருக்கும் அருள்களில் உள்ளதாகும். ஆனால் இந்த விவசாயி தர்மம் செய்வதற்காக இதனை நடவில்லை, உணவுக்காகவோ, வியாபாரத்திற்காகவோ தான் இதனை நட்டார்.

---

*(1) புஹாரி – அத்தியாயம் : வேளான்மை, பாடம் : (பயிரிடப்பட்ட) நிலத்திலிருந்தும் (நடப்பட்ட) மரத்திலிருந்தும் உண்டால் கிடைக்கும் சிறப்பு (2320), முஸ்லிம் - அத்தியாயம் : தோப்புக் குத்தகை – (1553).*

இருப்பினும் அவருக்கு நன்மையுண்டு.

இவ்விடயம் வேளாண்மையுடன் சுருங்கிக் கொள்ளவில்லை. மாறாக ஒரு முஸ்லிம் செய்யும் எந்த நற்காரியத்திலிருந்தும் பிறர் பயனடைந்தால் அதற்கான கூலி அவருக்குக் கிடைக்கின்றது. எனவே ஒரு கிணற்றை ஒருவர் தோண்டி அதிலிருந்து மனிதனோ, பறவையோ, விலங்கோ நீர் அருந்தினால், அல்லது மக்கள் நிழல் பெறுமிடமொன்றை அமைத்து அங்கு மனிதனோ, பறவையோ, விலங்கோ நிழல் பெற்றால் அதன் மூலம் அவருக்கு நன்மை, கூலி கிடைக்கின்றது. இதுபோன்று தான் பயனுள்ள அனைத்து நற்காரியங்களும்.

இவை அனைத்திலும் முக்கியம் என்னவெனில் ஒரு முஸ்லிம் அச்செயல்களை செய்யும் போது நன்மையை எதிர்பார்த்து செய்ய வேண்டும்.



# 22

*நபி (ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து, தான் கொடுத்த கடனைத் திருப்பிக் கேட்டார். அப்போது, அவர் சற்று கடுமையான வார்த்தைகளைப் பேசினார். இதைக் கண்ட நபித்தோழர்கள் வருத்தப்பட்டனர். அதற்கு நபி (ஸல்) அவர்கள் "அவரை விட்டுவிடுங்கள் பொருளுக்குரியவர் பேசுவதற்கு உரிமையுண்டு" என்று கூறினார்கள்.*

*அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).*

*ஆதாரம் : புஹாரி, முஸ்லிம்.*[1]

## விளக்கவுரை

நபி (ஸல்) அவர்கள் ஒருவரிடம் ஓர் ஒட்டகத்தை விலைக்கு வாங்கி, அதன் கிரயத்தைக் குறிப்பிட்ட காலத்திற்குப் பின் தருவதாக பேசிக் கொண்டார்கள்.

குறித்த தவணை முடிந்ததும் அந்த நபர் பணத்தைப் பெற வந்து, நபியவர்களிடம் சென்று கோபத்துடனும், குரலை உயர்த்தியும் பணத்தைக் கேட்டார்.

இவரது பேச்சைக் கேட்ட நபித்தோழர்கள் கோபப்பட்டு, அந்த நபரைத் தாக்க முற்பட்டார்கள். ஏனெனில் அவர் நபி (ஸல்) அவர்களுடன் பூரணமான ஒழுக்கமுடன் நடந்து

---

*(1) புஹாரி – அத்தியாயம் : வகாலத், பாடம் : கடன்களை அடைப்பதில் பொறுப்புச் சாட்டல் (2306), அன்பளிப்பு, பாடம் : கைவசம் பெற்றுக் கொண்ட அன்பளிப்பும் பெற்றுக் கொள்ளப்படாத அன்பளிப்பும் (2606), முஸ்லிம் - அத்தியாயம் : தோப்புக் குத்தகை – (1601).*

கொள்ளவில்லை. நபியவர்களோ "அவரை விட்டு விடுங்கள், உரிமையாளருக்கு பேசும் உரிமை உண்டு" எனக் கூறினார்கள். அதாவது : அவருடைய உரிமையைக் கேட்கும் போது அவர் விரும்பியவாறு கேட்கலாம்.

மக்களுடன் பழகும் போது எமக்குப் பயனளிக்கும் முக்கியமான ஒரு பாடத்தை இந்நபிமொழியிலிருந்து நாம் பெறலாம். ஒரு மனிதர் தனது உரிமையைக் கோரும் போது நாம் அதனை செவிமடுக்க வேண்டும். அவரது பேச்சிற்கு முக்கியத்துவம் அளிக்க வேண்டும். அவர் குரலை உயர்த்தினாலோ

கோபப்பட்டாலோ அவரைக் குற்றம் பிடிக்கலாகாது.

இந்த நபியொழுங்கை நாம் கடைபிடிப்பதன் மூலம் உரிமைகள் உரியவர்களுக்குச் சென்றடையும். எமக்கு மத்தியில் சிக்கல்கள், கருத்து வேறுபாடுகள், தர்க்கங்கள் குறையும்.

# 23

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : “மறுமையின் இன்னல்களிலிருந்து அல்லாஹ் தன்னைக் காப்பாற்றுவது யாருக்கு மகிழ்ச்சியளிக்கின்றதோ அவர் கஷ்டவாளியின் துன்பத்தை நீக்கவும். அல்லது கடனைத் தள்ளுபடி செய்யவும்”.

அறிவிப்பவர் : அபூ கதாதா (ரலி).

ஆதாரம் : முஸ்லிம்.(1)

## விளக்கவுரை

மறுமை நாள்தான் அல்லாஹ் அடியார்களை அவர்களின் செயல்கள் பற்றி விசாரணை செய்து, அவர்கள் முன்வைத்த நன்மை தீமைக் கேட்ப தீர்ப்பு கூலி வழங்கும் நாளாகும். தமக்கிடையே கருத்து வேறுபாடுபட்ட விடயங்களில் அல்லாஹ் தீர்ப்பளித்து சுவர்க்கம் அல்லது நரகத்திற்குச் செல்லும்படி பணிப்பான்.

இந்நாளில் இடம்பெறும் ஆச்சர்யமான நிலமைகள், கோரமான சம்பவங்களின் காரணமாக மக்களின் துன்பம் கடுமையாகி விடும். இந்த கோரங்கள், துன்பங்களை விட்டும் மறுமையில் அல்லாஹ் தம்மைப் பாதுகாக்க வேண்டுமென விரும்புவோர் துன்பப் படுவோரின் துயர் துடைக்கட்டும். கடன்களைத் தள்ளுபடி செய்யட்டும்.

---

*(1) முஸ்லிம் - அத்தியாயம் : தோப்புக் குத்தகை – (1563).*

துயர் துடைத்தல், கடனைத் தள்ளுபடி செய்தல் ஆகியன மகத்தான நற்செயல்களில் உள்ளவையாகும். இருப்பினும் இவை ஸுன்னத்தே அன்றி கடமையன்று. கொடுத்த கடனைத் திரும்பப் பெறுவதில் தவணையை நீடித்தல் (அதுதான் இந்நபிமொழியில் கூறப்பட்டுள்ள துயர் துடைத்தலாகும்) அல்லது கடன் முழுவதையுமோ அல்லது ஒரு பகுதியையோ தள்ளுபடி செய்தல் மூலமே துன்பங்களை நீக்குதல் உருவாகின்றது.

உம்மிடம் ஒருவர் கடன் பெற்று, திருப்பிச் செலுத்த வேண்டிய தவணை வந்ததும் அவரால் செலுத்த முடியாத சிரமத்தில் இருக்கின்றார் என்று அறிந்தால் அவரது தவணையை நீர் நீடித்துக் கொடுங்கள், அல்லது உமக்கு வரவேண்டியதில் முழுத் தொகையையுமோ அல்லது ஒரு பகுதியையோ நீர் தள்ளுபடி செய்து விடுங்கள். இவ்வாறு நீர் செய்தால் பாரிய நன்மையில் இருக்கின்றீர். மறுமையின் துன்பங்களிலிருந்து உமக்கு விமோசனத்தையும், சுவர்க்கம், அல்லாஹ்வின் திருப்தி என்பவற்றையும் பெற எதிர்பார்க்கலாம்.

# 24

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "எமக்கு மோசடி செய்பவர் எம்மைச் சார்ந்தவர் அல்லர்".

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : முஸ்லிம்.(1)

## விளக்கவுரை

மதீனாவிலுள்ள ஒரு சந்தையில் நபி (ஸல்) அவர்கள் நடந்து சென்று கொண்டிருந்தார்கள். கோதுமை போன்று உணவுக் குவியலை விற்பனை செய்யும் ஒரு நபருக்கருகாமையால் சென்றார்கள். அக்குவியலில் மழைநீர் பட்டு ஈரலிப்பாக இருந்தது. அந்நபர் அதனை மறைத்து, மக்கள் காணாமலிருக்க குவியலின் அடிப்பகுதியில் வைத்திருந்தார்.

குறித்த இந்தப் பொருளில் குறையொன்று உள்ளதை உணர்ந்த நபி (ஸல்) அவர்கள் தனது கையை உள்ளே நுழைந்ததும் ஈரலிப்பை உணர்ந்தார்கள். "மக்கள் பார்வைக்காக இதனை மேலே வைத்திருக்கக் கூடாதா?" என அவரைக் கண்டித்து விட்டு "எமக்கு மோசடி செய்பவர் எம்மைச் சார்ந்தவர் அல்லர்" எனக் கூறினார்கள்.

அதாவது ஒரு வியாபாரி தனது பரிவர்த்தனைகளில்

(1) முஸ்லிம் - அத்தியாயம் : இறைநம்பிக்கை – (101).

தெளிவானவராகவும், உண்மையாளராகவும் இருத்தல் அவசியமாகும். சிலாகித்துக் கூறத் தகுதியற்ற எந்தப் பொருளையும் சிலாகித்து விற்கக் கூடாது. வாடிக்கையாளர்கள் குறித்த பொருளை ஓரங்கட்டும் அளவிற்குள்ள குறைபாடுகளை மறைக்கக் கூடாது. முறையின்றி பொருளின் விலையை உயர்த்தக் கூடாது.

கீழ்தரமான இச்செயல், இழிவான இப்பாவத்தை இந்நபிமொழி வன்மையாகத் தடுக்கின்றது. அதுதான் ஏமாற்றுதல். அதனைத் தவிர்ந்து கொள்ளுமாறும், எச்சரிக்கையாக இருக்குமாறும் மக்களை ஆர்வமூட்டுகின்றது. தனது வியாபாரம், பணி, உபதேசம், கல்வி போன்ற எந்த விடயத்திலும் மோசடி செய்வது ஒரு முஸ்லிமுக்கு ஆகாது. இஸ்லாத்தில் அனைத்து வகையான, எந்த தோற்றத்திலும் மோசடி, ஏமாற்று ஹராமானதாகும்.

# 25

*நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "யார் (பொய்ச்) சத்தியம் செய்து ஒரு முஸ்லிமின் உரிமையை அபகரித்துக்கொள்கிறாரோ அவருக்கு அல்லாஹ் நரகத்தைக் கட்டாயமாக்கி விட்டான்; சொர்க்கத்தை அவருக்குத் தடை செய்துவிட்டான்" என்று கூறினார்கள். அப்போது ஒரு மனிதர், "அது ஒரு சிறிய பொருளாய் இருந்தாலுமா, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "மிஸ்வாக் மரத்தின் ஒரு குச்சியாக அது இருந்தாலும் சரியே!" என்று பதிலளித்தார்கள்".*

*அறிவிப்பவர் : அபூ உமாமா (ரலி).*

*ஆதாரம் : முஸ்லிம்.*[1]

## விளக்கவுரை

மனித உரிமைகள் இஸ்லாம் அதிக கரிசனை எடுத்த விடயங்களில் ஒன்றாகும்.

பணமோ, வேறு பொருளோ பிற மனிதருடைய எந்தவொரு உரிமையையும் நாம் எடுக்கலாகாது.

மனித உரிமைகளை அபகரிப்பதை நபியவர்கள் இந்நபிமொழியில் எச்சரிக்கின்றார்கள். ஒரு முஸ்லிமின் உடமையைப் பொய்ச் சத்தியம் செய்து அபகரிப்பவனின் கூலி சுவனத்தை இழந்து, நரகத்தில் பிரவேசிப்பதாகும் என எமக்கு அறிவிக்கின்றார்கள்.

---

(1) முஸ்லிம் - அத்தியாயம் : இறைநம்பிக்கை – (137).

இவ்வார்த்தையை செவிமடுத்த நபித்தோழர்கள் : "அது ஒரு சிறிய பொருளாய் இருந்தாலுமா, அல்லாஹ்வின் தூதரே?" என வினவினார்கள். அதாவது மனித உரிமைகளிலிருந்து அற்பமான சிறிதளவு எடுத்தவரையும் இத்தண்டனை உள்ளடக்குமா? எனக் கேட்டனர். அப்போது நபியவர்கள் "மிஸ்வாக் மரத்தின் ஒரு குச்சியாக அது இருந்தாலும் சரியே!" என்றார்கள். அதாவது மக்களின் சொத்துக்களை, உரிமைகளை முறையின்றி எடுத்தல் பாரிய ஒரு விடயமாகும். அது மிஸ்வாக் குச்சி போன்ற அற்பமான ஒரு பொருளாக இருந்தாலும் சரி.

# 26

*அபூமூஸா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறினார்கள்: நபி (ஸல்) அவர்கள் என்னையும் முஆத் பின் ஜபல் (ரலி) அவர்களையும் யமன் நாட்டுக்கு அனுப்பிவைத்தார்கள். அப்போது, "(மக்களிடம்) எளிதாக நடந்துகொள்ளுங்கள்; (மக்களைச்) சிரமப்படுத்திவிடாதீர்கள்; நற்செய்தி(களை அதிகம்) கூறுங்கள்; (எச்சரிக்கை செய்யும் போதுகூட) வெறுப்பேற்றிவிடாதீர்கள். நீங்கள் இருவரும் (தீர்ப்பளிக்கும்போது) இணக்கமாக நடந்துகொள்ளுங்கள். முரண்பட்டுக் கொள்ளாதீர்கள்" என்று (அறிவுரை) கூறினார்கள்.*

*அறிவிப்பவர் : அபூ மூஸா அல்அஷ்அரீ (ரலி).*

*ஆதாரம் : புஹாரி, முஸ்லிம்.*[1]

## விளக்கவுரை

*யமன் தேசத்திற்கு மார்க்கத்தை எத்திவைக்கவும், மக்களுக்குக் கற்பிக்கவும் நபி (ஸல்) அவர்கள் அபூ மூஸா அல்அஷ்அரீ (ரலி), முஆத் பின் ஜபல் (ரலி) ஆகிய இரு பெரும் நபித்தோழர்களை அனுப்பினார்கள்.*

---

*(1) புஹாரி – அத்தியாயம் : அறப்போர் மற்றும் நபிவரலாறு, பாடம் : போரில் பிணங்கிக் கொள்ளுதல், கருத்து வேறுபடுதல் வெறுக்கத்தக்கது (3038), முஸ்லிம் - அத்தியாயம்: அறப்போர் மற்றும் நபிவரலாறு – (1733) இவ்வார்த்தை முஸ்லிமில் இருந்து பெறப்பட்டது.*

இருவரும் பயணிக்கு முன் நபியவர்கள் சுருக்கமான ஆனால் மகத்தான அருமையான ஓர் உபதேசத்தை வழங்கினார்கள்.

"எளிதாக நடந்துகொள்ளுங்கள்; சிரமப்படுத்திவிடாதீர்கள் : அதாவது மக்களுடன் மென்மையாக நடந்து கொள்ளுங்கள், வன்மையோ சிரமப்படுத்தலோ இன்றி அவர்களுக்கு மார்க்கத்தை எத்தி வையுங்கள். இம்மார்க்கம் இலகுவானது, அதில் கடுமையோ, க~;டமோ இல்லை என்பதை அவர்களுக்கு அறிவியுங்கள்.

நற்செய்தி கூறுங்கள்; வெறுப்பேற்றிவிடாதீர்கள் : அதாவது அல்லாஹ்வின் அருளைப் பற்றிய நற்செய்தியுடனும், அவனிடமுள்ள வெகுமதிகளை அவர்களுக்கு ஆர்வமூட்டும் விதத்திலும் மக்களுடன் உரையாடுங்கள். ஈமான் கொள்வதை, நற்செயல் புரிவதைத் தடுக்கக் கூடிய வெறுப்பூட்டும் விதத்தில் அவர்களுடன் உரையாட வேண்டாம்.

பின்னர், சகோதரர்களாக, நண்பர்களாக இருக்கும் இருவருக்கு முக்கியமான ஒரு உபதேசத்தை மூன்றாவதாகக் கூறினார்கள். நீங்கள் இருவரும் இணக்கமாக நடந்துகொள்ளுங்கள். முரண்பட்டுக் கொள்ளாதீர்கள். இருவரில் ஒருவர் ஒரு விடயத்தை செய்ய ஆர்வமாக உள்ள போது நேசம், அன்னியோன்னியம் நிலைத்திருக்கவும், தோழமை நீடிக்கவும் மற்றவர் இவருக்கு அவ்விடயத்தில் கட்டுப்படல் வேண்டும்.

இவ்வுபதேசத்திலிருந்து நாம் முக்கியமானதொரு பாடத்தைப் பெறுகின்றோம். அது என்னவெனில் தனது நண்பர்களுடன் முரண்படாமல் முடியுமானளவு இணங்கிப் போகும் தோழன் ஸுன்னாவை செயற்படுத்தியவனாவான். கருத்து வேற்றுமை, தர்க்கம், முரண்பாடுகளை அதிகரிப்பவர் இச்செயலின் மூலம் நபி வழியை விட்டும் தூரமானவனாவான்.

# 27

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "எமக்கு எதிராக ஆயுதமேந்தியவர் எம்மைச் சார்ந்தவர் அல்லர்".

அறிவிப்பவர் : அபூ மூஸா அல்அஷ்அரீ (ரலி).

ஆதாரம் : புஹாரி, முஸ்லிம்.[1]

## விளக்கவுரை

பாதுகாப்பு அல்லாஹ்வின் மிகப்பெரும் அருள்களில் ஒன்று என்பதுடன் வாழ்க்கையின் இன்றியமையாத ஒன்றாகும்.

அபயம் எனும் பாதுகாப்பை தனது அடியார்களுக்கு வழங்கிய ஓர் அருட்கொடையாக அவன் சொல்லிக் காட்டுகின்றான். "இவ்வீட்டின் (கஃபாவின்) இறைவனை அவர்கள் வணங்குவார்களாக. அவனே, அவர்களுக்கு பசிக்கு உணவளித்தான்; மேலும் அவர்களுக்கு அச்சத்திலிருந்தும் அபயமளித்தான்." (குரைஷ் - 3-4)

ஒரு சமூகத்தில் பாதுகாப்பின் அவசியம் கருதியே மக்களை அச்சுறுத்தி, அவர்களுக்கு மத்தியில் பயத்தை பரப்பவும்,

---

(1) புஹாரி – அத்தியாயம் : பித்னாக்கள், பாடம் : எமக்கு எதிராக ஆயுதமேந்தியவர் எம்மைச் சார்ந்தவர் அல்லர் என்ற நபிமொழி (7071), முஸ்லிம் - அத்தியாயம்: இறைநம்பிக்கை – (100).

கொலையச்சுறுத்தல் விடுக்கவும் ஆயுதமேந்துவதை நபியவர்கள் எச்சரித்தார்கள். ஆட்சியாளர்களுக்கு எதிராக புரட்சி செய்தல், கட்டுப்படுதலை சீர்குலைத்தல், கட்டமைப்பை விட்டும் பிரிந்து செல்லல் போன்றனவும் இதில் அடங்கும்.

இந்நபி மொழியிலுள்ள "எமக்கு எதிராக ஆயுதமேந்தியவர் எம்மைச் சார்ந்தவர் அல்லர்" என்ற வாசகம் மேற்கண்ட நோக்கங்களுக்காக ஆயுதமேந்தியவர் நபியவர்களைச் சார்ந்தவரல்லர், இது பெரும்பாவங்களில் ஒன்றாகும் என்பதற்கு ஆதாரமாகின்றது.

# 28

அப்துல்லாஹ் பின் முகஃப்பல் (ரலி) அவர்கள் கூறினார்கள்: நபி (ஸல்) அவர்கள் "சிறிய கற்களைச் சுண்டியெறிய வேண்டாமெனத் தடுத்து வந்தார்கள்". அவ்வாறு சிறிய கற்களைச் சுண்டியெறிவதால் வேட்டைப் பிராணிகள் வேட்டையாடப்படுவதோ எதிரிகள் வீழ்த்தப் படுவதோ கிடையாது. மாறாக, அது பல்லை உடைக்கலாம்; கண்ணைப் பறித்து விடலாம். (அவ்வளவுதான் அதனால் முடியும்)".

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் முகஃப்பல் (ரலி).

ஆதாரம் : புஹாரி, முஸ்லிம்.[1]

## விளக்கவுரை

மக்களது ஆன்மீக, லௌகீக விடயங்களில் அவர்களுக்கு பயனுள்ளதைப் போதிப்பதிலும், தீங்கு விளைவிப்பதை எச்சரிப்பதிலும் நபி (ஸல்) அவர்கள் அதிக அக்கறையுடன் இருந்தார்கள். அதனை வைத்தே அல்லாஹ் அன்னாரை சிலாகித்துக் கூறியுள்ளான் : "(முஃமின்களே!) நிச்சயமாக உங்களிலிருந்தே ஒரு தூதர் உங்களிடம் வந்திருக்கின்றார்; நீங்கள் துன்பத்திற்குள்ளாகி விட்டால், அது அவருக்கு மிக்க வருத்தத்தைக் கொடுக்கின்றது; அன்றி, உங்(கள் நன்மை)களையே

(1) புஹாரி – அத்தியாயம் : நற்பண்புகள், பாடம் : கற்களைச் சுண்டியெறிவதைத் தடுத்தல் (6220), முஸ்லிம் - அத்தியாயம்: வேட்டை மற்றும் அறுப்புப் பிராணிகள் – (1954) இவ்வார்த்தை முஸ்லிமில் இருந்து பெறப்பட்டது.

அவர் பெரிதும் விரும்புகிறார்; இன்னும் முஃமின்கள் மீது மிக்க கருணையும் கிருபையும் உடையவராக இருக்கின்றார்.'' (தவ்பா : 128)

அதனை ஓர் அருட்கொடையாகக் கூறியுள்ளான் : ''நிச்சயமாக அல்லாஹ் முஃமின்களுக்கு அருள் புரிந்திருக்கின்றான்; அவன் அவர்களுக்கு அவர்களிலிருந்தே ஒரு ரஸூலை(தூதரை) அனுப்பி வைத்தான்; அவர் அவனுடைய வசனங்களை அவர்களுக்கு ஓதிக் காண்பிக்கிறார்; இன்னும் அவர்களைப் (பாவத்தைவிட்டும்) பரிசுத்தமாக்குகிறார்; மேலும் அவர்களுக்கு வேதத்தையும் ஞானத்தையும் கற்றுக் கொடுக்கின்றார் - அவர்களோ நிச்சயமாக இதற்கு முன் பகிரங்கமான வழி கேட்டிலேயே இருந்தனர்.'' (ஆல இம்ரான் : 164)

இந்த நபிமொழியில் அறியாமைக் காலத்திலும், இஸ்லாத்தின் ஆரம்ப காலத்திலும் மக்கள் செய்து கொண்டிருந்த ஒரு செயலைத் தடுக்கின்றார்கள். அதுதான் கைகளினால் கற்களை சுண்டி விடுதல்.

கற்களை சுண்டி வீசுவதில் எவ்விதப் பயனுமில்லை, ஒரு பிராணியைக் கொல்லவும் மாட்டாது, ஒரு எதிரியைத் தோற்கடிக்கவும் முடியாது. மாறாக அதனால் ஆபத்துத் தான் ஏற்படும். பல்லைத் தாக்கி உடைத்து விடும், கண்ணைத் தாக்கி செயலிழக்கச் செய்துவிடும் என தடை செய்தமைக்கான காரணத்தை விளக்கினார்கள்.

இத்தடையானது மக்களில் சிறியோர், பெரியோர் அனைவருக்கும் பொதுவானதாகும். இருப்பினும் சிறார்களுக்கு இதனை நினைவூட்ட வேண்டிய தேவை அதிகமாகும். அவர்களிடம் தான் இது அதிகமாக உண்டு. எனவே இது பற்றி அவர்களுக்கு உபதேசித்து, வழிகாட்டி, போதிப்பது அவசியமாகும்.

# 29

*நான் நபி (ஸல்) அவர்களுக்கு பத்து வருடங்கள் பணிவிடை செய்துள்ளேன். என்னைப் பார்த்து ஒரு தடவையேனும் "சீ" எனக் கூறியதில்லை.*

*அறிவிப்பவர் : அனஸ் பின் மாலிக் (ரலி).*

*ஆதாரம் : புஹாரி, முஸ்லிம்.*[1]

## விளக்கவுரை

நபி (ஸல்) அவர்கள் மக்காவிலிருந்து மதீனாவிற்கு இடம் பெயர்ந்து வந்து சேர்ந்த போது அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களை அவர்களது தாயார் நபியவர்களிடம் அழைத்து வந்து, (அப்போது அவருக்கு பத்து வயதிருக்கும்) "அல்லாஹ்வின் தூதரே! இதோ என் மகன் அனஸ் உங்களுக்குப் பணிவிடை செய்ய நான் அழைத்து வந்தேன்" என்றார். நபியவர்களும் அவரை வரவேற்றார்கள்.

அன்று முதல் அனஸ் (ரலி) நபி (ஸல்) அவர்களின் பணியாளரானார். நபியுடைய பல தேவைகளை நிறைவேற்றுவார்கள். சில நேரங்களைத் தவிர அன்னாரை பிரியவே மாட்டார்கள்.

---

*(1) புஹாரி – அத்தியாயம் : நற்பண்புகள், பாடம் : அழகிய குணம், மற்றும் கொடை (6038), முஸ்லிம் - அத்தியாயம்: சிறப்புக்கள் – (2309).*

*இந்த நபிமொழியில் அனஸ் (ரலி) நபியுடைய நற்பண்புகளை எமக்கு அறிவிக்கின்றார். அவர் நபியவர்களுக்கு 10 வருடங்கள் பணிவிடை செய்ததாகவும், அக்காலப் பகுதியில் நபியிடமிருந்து ஒரு கண்டன வார்த்தையோ, பழிச் சொல்லோ, ஏச்சுக்களோ, ஏன் சீ என்ற வார்த்தையைக் கூட தான் ஒருபோதும் கேட்டதில்லை எனக் கூறுகின்றார்கள்.*

*இது நபிகளார் தோழர்களுடன் பழகும் நற்குணத்தின் மகத்துவத்தை எடுத்துக் காட்டுகின்றது. அவர்கள் சிறார்களாகவோ, வயோதிபர்களாகவோ இருக்கலாம். பணியாட்களாகவோ, கணவான்களாகவோ இருக்கலாம்.*

*இந்நபிமொழியிலிருந்து நாம் பெறும் பிரதான படிப்பினை எமக்குக் கீழுள்ள ஊழியர்கள், பணியாட்களிடம் கனிவாக நடந்து கொள்ள வேண்டும் என்பதாகும். அவர்களும் எம்மைப் போன்ற மனிதர்களே. அவர்களை மதித்து, கண்ணியப்படுத்தி, அவர்களுக்குரிய உரிமைகளைக் கொடுப்பது எமது கடமையாகும்.*

# 30

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "உங்களில் ஒருவர் ஒரு சபையிலிருந்து எழுந்து சென்று, மீண்டும் திரும்பி வந்தால் அவ்விடத்திற்கு அவரே மிகவும் தகுதியானவராகும்".

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : முஸ்லிம்.[1]

## விளக்கவுரை

எமது இஸ்லாமிய மார்க்கம் பரிபூரணமான மார்க்கமாகும். இம்மையிலும் மறுமையிலும் எமக்குப் பயனளிக்கக் கூடிய சிறிய, பெரிய எந்த விடயத்தையும் நமக்குத் தெளிவுபடுத்தாமல் விடவில்லை.

இந்த நபிமொழியில் கூறப்பட்டுள்ள சபையில் பேண வேண்டிய ஒழுக்கம் பற்றிய விடயமும் அவற்றில் ஒன்றாகும்.

இந்த ஒழுக்கம் என்னவெனில் : ஒரு நபர் ஒரு சபையில் உட்கார்ந்து விட்டு, பின் எழுந்து சென்று, மீண்டும் திரும்பினால் அந்த இடத்திற்கு அவரே மிகத் தகுதியானவர் என்பதாகும். வேறொருவருக்கு அவ்விடத்தில் உட்கார அனுமதியில்லை. சபை களைய முன் அவர் எப்போது திரும்பி வருகிறாரோ அவர் தான் அவ்விடத்திற்குத் தகுதியானவராகும்.

---

(1) முஸ்லிம் - அத்தியாயம்: ஸலாம் கூறுதல் – (2179).

பொதுச் சபைகள், பள்ளிவாயில்கள், கல்வி அமர்வுகள், வகுப்பறைகள் போன்ற அனைத்தும் இதில் அடங்கும்.

சபையிலிருந்து ஒருவர் எழுந்து சென்று சிறிது நேரத்தில் திரும்பினால் அவ்விடத்திற்கு அவரே தகுதியானவர். ஆனால் நீண்ட நேரத்திற்குப் பின் திரும்பினால் அவருக்கு அவ்விடத்தில் உட்காரும் உரிமையில்லை. உதாரணமாக ளுஹ்ருக்குப் பின் எழுந்து சென்று அஸ்ர் அல்லது மஃரிபிற்குப் பின் அல்லது அடுத்த நாள் திரும்பி வந்தால் ஏற்கெனவே உட்கார்ந்த இடத்தை உரிமை கோர முடியாது.

குறிப்பு : இளைஞர்களுக்கு மத்தியில் ஏற்படும் அதிகமான பிணக்குகள் சபை இருப்பிடங்கள் காரணமாகத் தான் ஏற்படுகின்றன. குறிப்பாக வீடுகளில், மற்றும் வகுப்பறை இருக்கைகள் விடயத்தில் அதிகம் நிகழ்கின்றன.

எமது சபை அமர்வுகளில் மார்க்க ஒழுக்கங்களைப் பேணினால் எமது நேசம் அதிகரிக்கும், முரண்பாடுகள் குறையும்.

# 31

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "ஒரு முஸ்லிம் இன்னொரு முஸ்லிமுக்குச் செய்ய வேண்டிய கடமைகள் ஆறாகும்" என்று கூறினார்கள். "அவை யாவை, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவரைச் சந்திக்கும்போது முகமன் கூறுவாயாக. அவர் உன்னை விருந்துக்கு அழைத்தால் அவருக்குப் பதிலளிப்பாயாக. அவர் உன்னிடத்தில் அறிவுரை கூறச்சொன்னால் அவருக்கு அறிவுரை கூறுவாயாக. அவர் தும்மி "அல்ஹம்துலில்லாஹ்" என்று கூறினால் (யர்ஹமு கல்லாஹ் என்று) அவருக்கு மறுமொழி கூறுவாயாக. அவர் நோய்வாய்ப்பட்டால் அவரை உடல்நலம் விசாரிப்பாயாக. அவர் இறந்துவிட்டால் அவரது ஜனாஸாவைப் பின்தொடர்ந்து செல்வாயாக".

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).

ஆதாரம் : முஸ்லிம்.(1)

## விளக்கவுரை

ஒரு முஸ்லிம் அடுத்த முஸ்லிமுக்கு செய்ய வேண்டிய கடமைகள் அதிகமுள்ளன. அவற்றில் இந்நபிமொழியில் கூறப்பட்டுள்ள கடமைகள் பிரதானமானவையாகும் :

முதலாவது : ஸலாம். உமது சகோதரனை சந்தித்தால் ஸலாம் கூறும், அவர் ஸலாம் கூறினால் நீர் பதில் கூற வேண்டும்.

இரண்டாவது : அழைப்பிற்கு பதிலளித்தல். அவர்

---

*(1) முஸ்லிம் - அத்தியாயம்: ஸலாம் கூறுதல் – (2162).*

ஏதாவதொன்றிற்கு அழைத்தால் அதற்கு பதிலளிக்க வேண்டும். குறிப்பாக திருமண விருந்திற்கு அழைத்தால் பதில்ளிப்பது மிக முக்கியமாகும்.

*மூன்றாவது :* ஆலோசனை வழங்கல். உமது சகோதரன் உம்மிடம் ஏதாவது ஆலோசனை கேட்டால், அல்லது ஏதாவதொன்றைப் பற்றிக் கேட்டால் அவர் கேட்கும் விடயத்தை உண்மையாகவும், உளத்தூய்மையுடனும் ஆலோசனையாக வழங்க வேண்டும்.

*நான்காவது :* தும்மலுக்கு பதிலளித்தல். உமது சகோதரர் தும்மி, அல்ஹம்துலில்லாஹ் (எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே) எனக் கூறினால், நீர் யர்ஹமுகல்லாஹ் (அல்லாஹ் உனக்கு அருள் புரியட்டும்) எனக் கூற வேண்டும். நீர் அவ்வாறு கூறினால் தும்மியவர் யஹ்தீகுமுல்லாஹ் வயுஸ்லிஹு பாலகும் (அல்லாஹ் உமக்கு நேர்வழி காட்டி, உமது விடயங்களை சீராக்கட்டும்) எனக் கூற வேண்டும்.

*ஐந்தாவது :* நலம் விசாரித்தல். உமது சகோதர முஸ்லிம் நோயுற்றால் அவரைச் சந்தித்து நலம் விசாரிக்க வேண்டும். நீர் அவ்வாறு சந்திப்பதில் நோயாளியின் உள்ளத்தில் பாரிய ஒரு மாற்றம் ஏற்படுவதுடன் அல்லாஹ்விடத்தில் மகத்தான கூலியும் கிடைக்கும்.

*ஆறாவது :* ஜனாஸாவைப் பின் தொடர்தல். மரணத்திற்குப் பின்னர் கூட ஒரு முஸ்லிமுக்குச் செய்ய வேண்டிய கடமை தொடர்கின்றது. அவர் மரணித்தால் ஜனாஸாவைப் பின்தொடர வேண்டும். அதாவது தொழுகையில் பங்கெடுத்து, அடக்க நிகழ்வுக்காக கப்ருக்கும் செல்ல வேண்டும். இதில் பாரிய நன்மையுண்டு. இதில் மரணித்தவருக்கு நல்ல பிரார்த்தனையும் உயிருடனிருப்பவருக்கு பாரிய கூலியும் கிடைக்கின்றது.

# 32

*நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "நீங்கள் பாதைக்கு அதன் உரிமையைக் கொடுத்து விடுங்கள்" என்று கூறினார்கள். மக்கள், 'பாதையின் உரிமை என்ன?' என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள், "(அந்நியப் பெண்களைப் பார்க்காமல்) பார்வையைத் தாழ்த்திக் கொள்வதும் (பாதையில் செல்வோருக்குச் சொல்லாலோ செயலாலோ) துன்பம் தராமலிருப்பதும், ஸலாமுக்கு பதிலுரைப்பதும், நன்மை புரியும்படி கட்டளையிடுவதும், தீமையிலிருந்து தடுப்பதும் (அதன் உரிமைகள்) ஆகும்" என்று பதிலளித்தார்கள்.*

*அறிவிப்பவர் : அபூ ஸஈத் அல்குத்ரீ (ரலி).*

*ஆதாரம் : புஹாரி, முஸ்லிம்.*[(1)]

## விளக்கவுரை

நபி (ஸல்) அவர்களின் காலத்தில் மக்கள் பாதையோரங்களில் ஒன்றுகூடி, கதைத்து, சினேகபூர்வமாக இருப்பார்கள்.

நபியவர்கள் பாதையோரங்களில் நீங்கள் உட்கார வேண்டாம் என அவர்களுக்குக் கூறிய போது "நாம் இவ்வாறு கூடிக் கதைக்க வேண்டிய அவசியத்தில் உள்ளோம் அல்லாஹ்வின் தூதரே!" எனக் கூறினர். அப்படியாயின் பாதைக்குரிய கடமைகளைச் செய்யுங்கள் என நபியவர்கள் கூறினார்கள். பாதையின் கடமை என்ன? என வினவிய போது, கீழ்க்கண்ட நான்கு கடமைகளைக் கூறினார்கள்.

---

*(1) புஹாரி – அத்தியாயம் : அநீதிகள், பாடம் : வீட்டுவிராந்தைகள், அதில் உட்கார்தல், மற்றும் பாதையோரங்களில் உட்கார்தல் (2465), முஸ்லிம் - அத்தியாயம்: சிறப்புக்கள் – (2121).*

*1.* பார்வையைத் தாழ்த்துதல் : பாதையோரத்தில் உட்காரும் போது திறந்திருக்கும் வீட்டைக் கண்டால் அங்கு பார்க்கலாகாது, அதேபோன்று பாதையில் பெண்களைக் கண்டாலும் பார்வையைத் தாழ்த்திக் கொள்ள வேண்டும். அல்லாஹ் கூறுகின்றான்: *“முஃமின்களுக்கு தங்களது பார்வைகளைத் தாழ்த்திக் கொள்ளுமாறு (நபியே!) நீர் கூறும்” (நூர் : 30)*

*2.* நோவினையைத் தவிர்த்தல் : அதாவது பாதையில் நெருக்கடி ஏற்படுத்தாதிருத்தல், மக்களைத் துன்புறுத்தும் அழுக்குகள், குப்பைகளைக் கொட்டாதிருத்தல்.

*3.* ஸலாத்திற்கு பதிலளித்தல் : பாதையில் செல்லும் ஒருவர் ஸலாம் கூறினால் உட்கார்ந்திருப்போர் பதில் கூறுவது அவசியமாகும். ஸலாம் கூறுவது ஸுன்னாவாகும், அதற்கு பதிலளிப்பது கடமையாகும். அல்லாஹ் கூறுகின்றான் : *“உங்களுக்கு ஸலாம் கூறப்படும் பொழுது, அதற்குப் பிரதியாக அதைவிட அழகான (வார்த்தைகளைக் கொண்டு) ஸலாம் கூறுங்கள்; அல்லது அதையே திருப்பிக் கூறுங்கள் - நிச்சயமாக அல்லாஹ் எல்லாப் பொருட்களின் மீதும் கணக்கெடுப்பவனாக இருக்கிறான்.” (நிஸா : 86)*

*4.* நன்மையை ஏவி தீமையைத் தடுத்தல் : முஃமின்கள் நன்மையை ஏவித் தீமையைத் தடுப்பார்கள் என அல்லாஹ் அவர்களை சிலாகித்துக் கூறுகின்றான் : *“முஃமினான ஆண்களும் முஃமினான பெண்களும் ஒருவருக்கொருவர் உற்ற துணைவர்களாக இருக்கின்றனர்; அவர்கள் நல்லதைச் செய்ய தூண்டுகிறார்கள்; தீயதை விட்டும் விலக்குகிறார்கள்; தொழுகையைக் கடைப்பிடிக்கிறார்கள்; (ஏழை வரியாகிய) ஸகாத்தை (முறையாகக்) கொடுத்து வருகிறார்கள்; அல்லாஹ்வுக்கும் அவன் தூதருக்கும் வழிப்படுகிறார்கள்; அவர்களுக்கு அல்லாஹ் சீக்கிரத்தில் கருணை புரிவான் - நிச்சயமாக அல்லாஹ் மிகைத்தவனாகவும், ஞானமுடையவனாகவும் இருக்கின்றான்.” (தவ்பா : 71)*

# 33

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "(மரண சாசனம் செய்ய) ஏதேனும் ஒரு பொருளைப் பெற்றிருக்கும் எந்த ஒரு முஸ்லிமுக்கும் அவர் தன்னுடைய மரண சாசனத்தை எழுதித் தன்னிடம் வைத்திருக்காமல் இரண்டு இரவுகள் கூட கழிப்பதற்கு அனுமதியில்லை".

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் உமர் (ரலி).

ஆதாரம் : புஹாரி, முஸ்லிம்.[1]

## விளக்கவுரை

மரண சாசனம் (வஸிய்யத்) எழுத வேண்டிய தேவையுடைய ஒருவர் அதனைச் செய்ய வேண்டுமென்பதை இந்நபிமொழி அறிவிக்கின்றது.

ஒரு மனிதன் கொடுக்க வேண்டிய கடன், நிறைவேற்றாத ஸகாத் இருந்தால், அல்லது அமானிதப் பொருளோ, அடமானம் போன்ற உரிமைகள் அவனிடம் இருந்தால் அவன் அவற்றை வஸிய்யத்தாக எழுதி வைப்பது அவசியமாகும்.

மேற்கண்ட உரிமைகள் ஏதும் இல்லாவிட்டால் வஸிய்யத் எழுதுவது கடமையில்லை. மாறாக ஸுன்னத்தாகும். தனது சொத்தில் மூன்றில் ஒரு பகுதியை பொதுச் சேவை,

(1) புஹாரி – அத்தியாயம் : மரணசாசனங்கள், பாடம் : மரணசாசனங்கள் (2738), முஸ்லிம் - அத்தியாயம்: மரணசாசனம் – (1627).

நற்பணிகளுக்காக எழுதி வைக்கலாம்.

சிறிய விடயங்களில் கூட வஸிய்யத் எழுத வேண்டும் என்பது இங்கு கவனிக்கத்தக்க விடயமாகும். ஒரு தொகை கடன் எடுத்தல், பிறகு பணம் செலுத்தும் நோக்கில் ஒரு பொருளைக் கொள்வனவு செய்தல் போன்ற அடிக்கடி அன்றாட வாழ்வில் நிகழும் விடயங்களைக் கூட வஸிய்யத்தாக எழுதி வைக்க வேண்டும்.

வஸிய்யத் செய்யவென குறித்த வார்த்தை ஏதும் இல்லை. தான் வஸிய்யத் செய்ய விரும்புவதை தெளிவாக புரிந்து கொள்ள முடியுமான விதத்தில் எழுதினால் போதுமானதாகும். அதனை ஒரு காகிதத்திலும் எழுதி வைக்கலாம். அல்லது மின்னஞ்சல், குறுந்தகவல், கையடக்கத் தொலைபேசி குறுந்தகவல் மூலமும் பதிந்து வைக்கலாம். அல்லது எழுதாமல் வாயினால் கூறி வைத்தாலும் சரி. எல்லாம் அழகிய முறைகள் தான். எதனைச் செய்தாலும் போதுமானதாகும் இன்ஷா அல்லாஹ்.



# 34

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "உங்கள் பெற்றோர் மீது சத்தியம் செய்வதை விட்டும் அல்லாஹ் உங்களைத் தடுக்கின்றான். எனவே சத்தியம் செய்பவர் அல்லாஹ்வின் மீதே சத்தியம் செய்யட்டும், அல்லது மௌனித்திருக்கட்டும்".

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் உமர் (ரலி).

ஆதாரம் : புஹாரி, முஸ்லிம்.[1]

## விளக்கவுரை

அறியாமைக் கால வழமையின் படி நபித்தோழர்கள் அல்லாஹ் அல்லாதவற்றின் மீது சத்தியம் செய்யக் கூடியவர்களாக இருந்தனர். தமது பெற்றோர் மீதும், கௌரவம், அமானிதம் போன்றவற்றின் மீதும் சத்தியம் செய்வார்கள்.

நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ் அல்லாதவற்றின் மீது சத்தியம் செய்வதைத் தடுத்தார்கள். நபியவர்களின் இத்தடையை நேரடியாகச் செவிமடுத்தவர்களில் உமர் (ரலி) அவர்களும் ஒருவர். உடனடியாக அதற்குக் கட்டுப்பட்டார்கள். அதன் பின் அவர்களது நாவிலிருந்து அல்லாஹ் அல்லாதோரின் மீதான சத்தியம் வெளிப்படவேயில்லை.

---

(1) புஹாரி – அத்தியாயம் : சத்தியங்கள் மற்றும் நேர்ச்சைகள், பாடம் : உங்களது பெற்றோர் மீது சத்தியம் செய்ய வேண்டாம் (6646), முஸ்லிம் - அத்தியாயம்: சத்தியங்கள் – (1646).

இந்த நபிமொழியை அறிவித்த அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) கூறினார்கள் : ““நபி (ஸல்) அவர்கள் தடை செய்ததை நான் கேட்டதிலிருந்து அல்லாஹ்வின் மீது ஆணையாக பெற்றோர் மீது சத்தியம் செய்யவே இல்லை” என உமர் (ரலி) கூறினார்கள்.”

இதுதான் ஒரு முஸ்லிமின் கடமையாகும். அல்லாஹ்வின் கட்டளை வந்ததும் தடுமாற்றமோ, காலம் தாழ்த்தலோ, பலவீனமோ இன்றி மன உறுதியுடன் திடமாகக் கட்டுப்படுதல் வேண்டும்.

“உமது வாழ்க்கையின் மீது சத்தியமாக”, “நபியின் மீது சத்தியமாக”, “கஃபாவின் மீது சத்தியமாக” போன்ற வார்த்தைகள் தற்காலத்தில் அல்லாஹ் அல்லாதோரின் மீது சத்தியம் செய்யும் முறைகளில் சிலதாகும். இவையனைத்தும் ஹராமாக்கப்பட்ட, இணைவைப்பிலடங்கும் சத்திய முறைகளாகும்.

“கஃபாவின் மீது சத்தியமாக” என ஒரு மனிதர் கூறுவதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) கேட்டார்கள். அல்லாஹ் அல்லாதோர் மீது நீ சத்தியம் செய்யாதே. ஏனெனில் அல்லாஹ் அல்லாதவரின் மீது சத்தியம் செய்தவர் நிராகரித்து விட்டார், அல்லது இணைவைத்து விட்டார் என நபியவர்கள் கூறுவதைக் கேட்டுள்ளேன் எனக் கூறினார்கள்.(2)

---

*(2) அஹ்மத் (10/249/ஹ 6072), அபூ தாவூத் : அத்தியாயம் : சத்தியங்கள் மற்றும் நேர்ச்சைகள், பாடம் : பெற்றோர் மீது சத்தியம் செய்வதைத் தடுத்தல் (3251), திர்மிதி, அத்தியாயம் : நேர்ச்சைகள் மற்றும் சத்தியங்கள், பாடம் : அல்லாஹ் அல்லாதோர் மீது சத்தியம் செய்வதைத் தடுத்தல் (1535). இது ஹஸன், ஸஹீஹ் எனும் தரத்திலுள்ளதாகக் கூறியுள்ளார்கள். அஷ்ஷேக் அல்பானி இர்வாஉல் கலீல் நூலில் (8/189/ஹ 2561) இதனை ஸஹீஹ் எனக் கூறியுள்ளார்கள்.*

# 35

*நபி(ஸல்) அவர்கள் எந்த உணவையும் குறை கூறியதில்லை. விரும்பினால் உண்ணுவார்கள். இல்லாவிடில் விட்டு விடுவார்கள்.*

*அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி).*

*ஆதாரம் : புஹாரி, முஸ்லிம்.(1)*

## விளக்கவுரை

நபி (ஸல்) அவர்கள் சிறந்த பண்புடையவர்களாக இருந்தார்கள். அன்னார் நல்ல அழகிய வார்த்தைகளை விரும்பியதும், தீய இழிவான வார்த்தைகளை வெறுத்ததும் இதற்கான ஓர் எடுத்துக் காட்டாகும்.

இந்நபிமொழியிலும் நபியவர்களின் உயர்ந்த பண்புகளில் ஒன்று இடம் பெற்றுள்ளது. அன்னாருக்கு ஏதாவது உணவு வழங்கப்பட்டால் அதனை ஒருபோதும் குறை கூறமாட்டார்கள். இது ஆரிய உணவு, மோசமானது, பதமற்றது, சுவையற்றது, உவர்ப்புக் குறைவானது போன்ற குறை கூறும் வார்த்தைகளைப் பயன்படுத்த மாட்டார்கள். மாறாக விரும்பினால் உண்பார்கள். விரும்பாவிட்டால் தூற்றாமல் விட்டு விடுவார்கள்.

நாமும் நபி (ஸல்) அவர்களைப் பின்பற்ற வேண்டும். எந்த

---

*(1) புஹாரி – அத்தியாயம் : கீர்த்திகள், பாடம் : நபியவர்களின் தோற்றம், பண்பு (3563), முஸ்லிம் - அத்தியாயம்: குடிபாணங்கள் – (2064).*

உணவையும் எப்போதும் குறை கூறாமலிருப்போம். மாறாக அல்லாஹ்வின் அருட்கொடைக்காக அவனைப் புகழ்ந்து, நன்றி செலுத்துவது அவசியமாகும். அழகிய வார்த்தைகளையே நாம் கூறுவோம், நல்ல பேச்சுக்களையே பேசுவோம்.



# 36

*நபி (ஸல்) அவர்கள் மக்களில் மிக அழகிய முகமுடையவர்களாகவும், அழகிய தோற்றமுடையவர்களாகவும் இருந்தார்கள். அதிக உயரமானவர்களாகவும் இல்லை, குட்டையானவர்களாகவும் இல்லை.*

*அறிவிப்பவர் : பராஃ பின் ஆஸிப் (ரலி).*

*ஆதாரம் : புஹாரி, முஸ்லிம்.*[(1)]

## விளக்கவுரை

*நபி (ஸல்) அவர்கள் மக்களில் மிக அழகிய குணம் உடையவர்களாக இருந்தார்கள். இது விடயத்தில் அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான் : "(நபியே!) நீர் மகத்தான குணத்தில் இருக்கின்றீர்" (கலம் : 04)*

*நபியவர்கள் அழகிய குணத்துடன் அழகிய தோற்றமுடையவராகவும் இருந்தார்கள். இதுவிடயத்தில் நபித்தோழர் பராஃ இப்னு ஆஸிப் (ரலி) கூறுகின்றார் : நபி (ஸல்) அவர்கள் ஆழகிய முகமுடையவராகவும், அழகிய தோற்றமுடையவராகவும் இருந்தார்கள்.*

*அன்னார் அளவுக்கதிகமான உயரமானவராகவோ, குட்டையானவராகவோ இன்றி நடுத்தர உயரத்தில் இருந்தார்கள்.*

---

*(1) புஹாரி – அத்தியாயம் : கீர்த்திகள், பாடம் : நபியவர்களின் தோற்றம், பண்பு (3563), முஸ்லிம் - அத்தியாயம்: சிறப்புக்கள் – (2337/ 93).*

*பராஃ பின் ஆஸிப் (ரலி) அவர்களின் மற்றுமொரு அறிவிப்பில் "நபி (ஸல்) அவர்கள் நடுத்தர உயரமுடையவராகவும், அகன்ற மார்புடையவராகவும் இருந்தார்கள். அன்னாரின் காது ஓரம் வரை தலைமுடி இருந்தது. ஒரு சிவப்பு நிற ஆடையில் அன்னாரைக் கண்டேன் அவர்களை விட அழகான வேறு எதனையும் நான் கண்டதில்லை" என இடம்பெற்றுள்ளது.[2]*

*அனஸ் (ரலி) கூறுகின்றார் : நபி (ஸல்) அவர்கள் சிவப்பு கலந்த வெண்மை நிறத்தில் இருந்தார்கள்.[3]*

*அபூ ஹுரைரா (ரலி) கூறுகின்றார் : நபி (ஸல்) அவர்கள் வெள்ளியினால் வார்க்கப்பட்டவரைப் போன்று வெண்ணிறமாக இருந்தார்கள்.[4]*

*ஜாபிர் பின் ஸமுரா (ரலி) கூறுகின்றார் : அன்னாரை ஒரு பௌர்ணமி இரவில் நான் கண்டேன். அன்னாரையும் நிலவையும் பார்த்தேன். நிலவை விட அன்னார் தான் எனக்கு அழகாகக் காட்சியளித்தார்கள்.[5]*

---

*(2) புஹாரி - அத்தியாயம் : சிறப்புக்கள், பாடம் : நபியவர்களின் தோற்றம் (3551), முஸ்லிம் - அத்தியாயம் : சிறப்புக்கள் (2337/91).*

*(3) புஹாரி – அத்தியாயம் : சிறப்புக்கள், பாடம் : நபியவர்களின் தோற்றம் (3547), முஸ்லிம் (2330).*

*(4) திர்மிதி – அஷ்ஷமாஇலுல் முஹம்மதிய்யா (12) அஷ்ஷேக் அல்பானி ஸில்ஸிலா ஸஹீஹாவில் இதனை ஸஹீஹ் எனக் கூறியுள்ளார்கள் (2053).*

*(5) திர்மதி – அத்தியாயம் : ஒழுக்கம், பாடம் : ஆண்கள் சிவப்பு நிறம் அணிவதற்கான சலுகை (2811), அது ஹஸன், கரீப் எனும் தரத்திலுள்ளதாகக் கூறியுள்ளார்கள். முஃதஸர் ஷமாஇல் (பக் :8) எனும் நூலில் அஷ்ஷேக் அல்பானீ இதனை ஸஹீஹ் எனக் கூறியுள்ளார்.*

# 37

*மக்களில் உங்களுக்கு மிக நேசத்திற்குரியவர் யார்? என நபி (ஸல்) அவர்களிடம் கேட்டேன். "ஆஇஷா" என்றார்கள். ஆடவர்களில் யார்? எனக் கேட்டேன். "அவரது தந்தை" என்றார்கள். பின்பு யார்? எனக் கேட்டேன். "உமர் பின் கத்தாப்" என்றார்கள்.*

*அறிவிப்பவர் : அம்ரு பின் ஆஸ் (ரலி).*

*ஆதாரம் : புஹாரி, முஸ்லிம்.*[1]

## விளக்கவுரை

அம்ர் பின் ஆஸ் (ரலி) அவர்கள் பிரபலமான, மூத்த நபித்தோழர்களில் ஒருவராவார்.

நபி (ஸல்) அவர்களிடத்தில் தமக்கு பிடித்தமான மனிதர் யார் என வினவியதாக இந்நபிமொழியில் கூறியுள்ளார்கள். மக்களில் தனக்கு மிகவும் விருப்பத்திற்குரியவர் தனது மனைவி ஆஇஷா என நபியவர்கள் பதிலளித்தார்கள்.

ஆண்களில் தங்களுக்கு மிக நேசத்திற்குரியவர் யார் என அம்ரு (ரலி) கேட்க : அவரின் தந்தை என பதிலளித்தார்கள். அதாவது ஆஇஷா (ரலி) அவர்களின் தந்தை அபூபக்ர் (ரலி) அவர்களாகும். பின்பு யார் அல்லாஹ்வின் தூதரே என அம்ரு (ரலி) கேட்க, பின்

---

(1) புஹாரி – அத்தியாயம் : நபித்தோழர்கள், பாடம் : நான் உற்ற நண்பர் ஒருவரைத் தெரிவு செய்வதாக இருந்தால் அபூபக்ரைத் தெரிவு செய்திருப்பேன் என்ற நபியவர்களின் கூற்று (3662), முஸ்லிம் - அத்தியாயம்: நபித்தோழர்களின் சிறப்புக்கள் – (2384).

உமர் பின் கத்தாப் என நபி (ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள்.

ஆஇஷா (ரலி), அபூபக்ர் (ரலி), உமர் (ரலி) ஆகிய இம்மூன்று நபித்தோழர்களுக்கும் அவர்கள் நபியவர்களுக்கு மிக மோசமானவர்கள் என்பது மிகப்பெரிய சிறப்பம்சமாகும்.

இங்கு அறிந்து கொள்ளப்பட வேண்டிய விடயம் : நான்கு கலீபாக்களும் தான் நபித்தோழர்களில் சிறந்தவர்கள். கிலாபத் முறையின் ஒழுங்கு படியே இவர்களது சிறப்பும் உள்ளது. அவர்களில் மிகச் சிறந்தவர்கள் முறையே : அபூபக்ர் (ரலி), உமர் (ரலி), உஸ்மான் (ரலி), அலீ (ரலி) ஆகியோராகும்.

பொதுவாகவே முஹம்மத் (ஸல்) அவர்களது சமூகத்தில் இவர்கள்தான் மிகச்சிறந்தவர்கள். இவர்கள், மற்றும் ஏனைய நபித் தோழர்கள் விடயத்தில் எமது கடமை : அவர்களை நேசித்தல், மகத்துவப்படுத்தல், கண்ணியப்படுத்தல், அல்லாஹ்வின் திருப்தியை அவர்களுக்காகக் கேட்டல் என்பனவாகும். அல்லாஹ் அவர்களைப் பொருந்திக் கொள்வானாக!

# 38

நபி (ஸல்) அவர்கள் அதிகமாகக் கேட்கும் துஆ "அல்லாஹும்ம ஆதினா பித்துன்யா ஹஸனதன், வபில் ஆகிரதி ஹஸனதன் வகினா ஆதாபந் நார்" என்பதாகவே இருந்தது. (இறைவா, இவ்வுலகிலும் எமக்கு நலவைத் தருவாயாக, மறுமையிலும் எமக்கு நலவைத் தருவாயாக. மேலும் எம்மை நரக வேதனையிலிருந்து பாதுகாப்பாயாக).

அறிவிப்பவர் : அனஸ் பின் மாலிக் (ரலி).

ஆதாரம் : புஹாரி, முஸ்லிம்.[(1)]

## விளக்கவுரை

துஆ (பிரார்த்தனை) மகத்தான நற்செயல்களில் ஒன்றாகும். இது அல்லாஹ்வை மகத்துவப்படுத்தி, ஏகத்துவப்படுத்துவதன் அடையாளமாகும். அவனது அருள், மன்னிப்பு, திருப்தி, நேசம், ஏற்றுக் கொள்ளல், கொடை அனைத்திற்கும் இது பிரதான காரணமாகும்.

நபி (ஸல்) அவர்கள் அதிகமாகப் பிரார்த்திப்பார்கள். புஹாரி, முஸ்லிம், அபூதாவூத், திர்மிதி, நஸாஈ, இப்னு மாஜா போன்ற ஆறு ஹதீஸ் நூல்கள் உட்பட பல நூல்களில் அன்னாரின் பிரார்த்தனைகள் தாராளமாக உள்ளன.

---

(1) புஹாரி – அத்தியாயம் : பிரார்த்தனைகள், பாடம் : ரப்பனா ஆதினா பித்துன்யா ஹஸனதன் என்ற நபியவர்களின் கூற்று (6389), முஸ்லிம் - அத்தியாயம்: திக்ரு மற்றும் பிரார்த்தனை – (2690).

நபி (ஸல்) அவர்களின் துஆக்கள் அதிகமாக இருந்தாலும் ஹதீஸில் கூறப்பட்டுள்ள மேற்கண்ட "அல்லாஹும்ம ஆதினா பித் துன்யா ஹஸனதன் வபில் ஆகிரதி ஹஸனதன் வகினா அதாபந் நார்" எனும் துஆவை அதிகப்படுத்துவார்கள். ஏனெனில் இது ஈருலக நலவுகளையும் ஒருங்கிணைத்த, அல்குர்ஆனில் இடம்பெற்றுள்ள மகத்தான துஆவாகும்.

அஷ்ஷேக் அப்துர் ரஹ்மான் அஸ்ஸிஃதி (ரஹ்) கூறுகின்றார்: (2) "உலகில் வேண்டப்படும் நலவுகள், ஹலாலான, தாராளமான வாழ்வாதாரம், நல்ல மனைவி, கண்குளிர்ச்சி அடையும் குழந்தை, நிம்மதி, சந்தோசம், பயனுள்ள கல்வி, நற்செயல்கள் போன்ற ஒரு மனிதனுக்குக் கிடைப்பதற்கு அழகான அனைத்தும் இதில் அடங்கும்.

மறுமையின் நலவுகள், மண்ணறை, மஹ்ஷர் மைதானம், நரகம் போன்ற இடங்களிலுள்ள வேதனைகளிலிருந்து பாதுகாப்புப் பெறல், அல்லாஹ்வின் திருப்தியைப் பெறல், சுவனத்தை அடைதல், இரக்கமுள்ள இரட்சகனை நெருங்குதல் போன்றனவாகும்.

எனவே இந்த துஆ அனைத்தையும் ஒருங்கிணைத்த, தெரிவு செய்ய மிகப் பொருத்தமான துஆவாக மாறிவிட்டது. இதனால் தான் நபியவர்கள் இதனை அதிகம் ஓதி, ஊக்கப்படுத்தியும் உள்ளார்கள்.

---

(2) தனது தப்ஸீர் நூலில் ஸூரா பகராவின் 201ம் வசனத்திற்கு விளக்கம் அளிக்கும் போது இவ்வாறு கூறுகின்றார்.

# 39

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "மனிதன் இறந்துவிட்டால் அவனுடைய மூன்று செயல்களைத் தவிர மற்ற அனைத்தும் நின்று விடுகின்றன; 1.நிலையான அறக்கொடை 2. பயன்பெறப்படும் கல்வி. 3. அவனுக்காகப் பிரார்த்திக்கும் (அவனுடைய) நல்ல குழந்தை.".

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் உமர் (ரலி).

ஆதாரம் : முஸ்லிம்.(1)

## விளக்கவுரை

அல்லாஹ் தனது முஃமினான அடியார்களுக்கு தனது அருளின் பால் நெருக்கமாக்கும் தனது கோபம், தண்டனையை விட்டும் பாதுகாக்கும் நற்செயல்களைச் செய்யுமாறு பணித்துள்ளான்.

ஒரு மனிதன் மரணித்தால் மூன்று விடயங்களைத் தவிர உலகுடனான அவனது தொடர்பு அறுந்து விடும் என இந்நபிமொழியில் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். அம்மூன்று செயல்களின் காரணமாக மரணத்திற்குப் பின்னும் நன்மையை கிடைத்துக் கொண்டிருக்கும்.

முதலாவது : தனது வாழ்நாளில் நிரந்தரமான ஒரு தர்மத்தை செய்து வைத்தல். உதாரணமாக ஒரு பொதுக் கிணறு தோண்டுதல், அவரது மரணத்திற்குப் பின்னரும் அதன் பயன் தொடர்ந்து கொண்டிருக்கும். கிணற்றிலிருந்து ஒவ்வொருவர் பயனடையும் போதும் அதனைத் தோண்டியவருக்கு மரணத்திற்குப் பின்னரும்

(1) முஸ்லிம் - அத்தியாயம்: மரணசாசனம் – (1631).

நன்மைகள் கிடைத்துக் கொண்டிருக்கும்.

இதுபோன்று தான் : பள்ளிகள், வைத்தியசாலைகள், கல்விக் கூடங்களை நிர்மாணித்தல், அல்குர்ஆன் பிரதிகளை தர்மம் செய்தல் போன்ற இன்னும் பல நிரந்தர தர்மங்களின் வழிகள் உள்ளன.

இரண்டாவது : பயன் பெறப்படும் கல்வி. ஒரு சமூகத்திற்கு கற்பித்தால், உபதேசித்தால், வழிகாட்டினால், அல்லது ஒரு நூலை எழுதினால், அல்லது பயனுள்ள கல்வியை அச்சிடுதல், விநியோகித்தல், பிரசுரித்தல் போன்றவற்றில் பங்கெடுத்தால் மரணத்திற்குப் பின்னரும் அதன் நன்மை தொடர்ந்து கொண்டே இருக்கும்.

மூன்றாவது : ஸாலிஹான பிள்ளை. இங்கே பிள்ளை என்பது ஆண், பெண் இரு பாலரையும் குறிக்கும். ஒரு தந்தையோ, தாயோ தனது பிள்ளைகளை முறையாக வளர்த்தால் அப்பிள்ளைகள் செய்யும் அனைத்து நற்காரியங்களும் வளர்த்தவர்களின் தராசுத் தட்டில் மறுமையில் இருக்கும். அதேபோன்று தான் ஒரு நல்ல பிள்ளை எப்போதுமே தனது பெற்றோருக்காக பிரார்த்திப்பான். அல்லாஹ்விடம் அதற்குரிய கூலி, நன்மை, சிறப்புகளும் அவ்விருவருக்காகவும் தொடரும்.



# 40

*நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : “ஒவ்வொரு அடியானும் மரணிக்கும் போது இருந்த கொள்கையிலேயே மீள எழுப்பப் படுவான்”.*

*அறிவிப்பவர் : ஜாபிர் பின் அப்துல்லாஹ் (ரலி).*

*ஆதாரம் : முஸ்லிம்.*[1]

## விளக்கவுரை

இந்நபிமொழி இறுதி முடிவைப் பற்றிப் பேசுகின்றது. நபித்தோழர்கள் முதல் இன்று வரை நன்மக்கள் அதிக கரிசனை எடுக்கும் விடயமாக இது திகழ்கின்றது.

இறுதி முடிவு என்பதன் அர்த்தம் : ஒரு மனிதனின் வாழ்நாள் இறைநம்பிக்கை, நலவு, நற்செயல்களுடன் நிறைவு பெறுவதாகும்.

ஒரு மனிதன் எந்த நிலையில் மரணிக்கின்றானோ அதே நிலையில் தான் மறுமையில் எழுப்பப்படுவான் என நபியவர்கள் இந்நபிமொழியில் கூறுகின்றார்கள். ஹஜ், உம்ராவிற்காக தல்பியா கூறிய நிலையில் மரணித்தவர் தல்பியாக் கூறிய நிலையிலேயே எழுப்பப்படுவார். அல்லாஹ்வை திக்ரு செய்த

---

*(1) முஸ்லிம் - அத்தியாயம்: சுவனமும் அதன் இன்பங்கள் மற்றும் அதற்குரியவர்கள் – (2878).*

*நிலையில் மரணித்தவர் அதே நிலையில் எழுப்பப்படுவார். பாவத்தில் மரணித்தவர் அதே பாவத்தில் எழுப்பப்படுவார். அல்லாஹ் பாதுகாப்பானாக!*

நல்ல முடிவுகள் மூலம் எமது வாழ்க்கை நிறைவுரவும், அல்லாஹ்வின் அருள், மன்னிப்பு, திருப்தியுடன் மறுமையில் நாம் எழுப்பப்படவும் பாவங்களை விட்டும் தூரமாவதும் எமது கால நேரங்களை நற்செயல்களால் நிரப்புவதும் அவசியமாகும்.

# சிறார்களுக்கான நாற்பது நபிமொழிகளும் ஒரே பார்வையில்

1- عن عبدِ اللهِ بنِ عُمَرَ بنِ الخطَّابِ ﵄ قال: قال رسول الله ﷺ: **«بُني الإسلامُ على خمسٍ: شهادةِ أن لَّا إِلٰهَ إلَّا اللهُ، وأنَّ محمَّدًا رسولُ الله، وإقامِ الصلاةِ، وإيتاءِ الزَّكاةِ، والحجِّ، وصومِ رمضانَ»**.

متفق عليه

2- عن أنسِ بن مالكٍ ﵁ قال: سُئِل النبيُّ ﷺعن الكبائر، فقال: **«الإشْرَاكُ بِاللهِ، وعُقُوقُ الوالِدَينِ، وقتلُ النَّفْسِ، وشهادةُ الزُّورِ»**.

متفق عليه

3- عن عبد الله بن عمرو ﵄ قال: قال رسول الله ﷺ: **«المُسلِمُ: مَن سَلِمَ المُسْلِمونَ مِن لسانِه ويَدِه»**. متفق عليه

4- عن أبي هريرة ﵁ قال: قال رسول الله ﷺ: **«آيةُ المُنافقِ ثلاثٌ: إذا حدَّثَ كَذَبَ، وإذا وعَدَ أَخْلَفَ، وإذا اؤْتُمِنَ خانَ»**. متفق عليه

5- عن جابر بن عبد الله ﵁، قال: قال رسول الله ﷺ: «**بين الرجُلِ وبين الشّرِكِ والكفرِ ترْكُ الصَّلاةِ**». رواه مسلم

6- عن أبي هريرة ﵁، قال: قال رسول الله ﷺ: «**المؤمنُ القويُّ خيرٌ وأحبُّ إلى الله من المؤمنِ الضعيف، وفي كُلٍّ خير**». رواه مسلم

7-عن عثمانَ بنِ عفّانَ ﵁، قال: قال رسول الله ﷺ: «**من توضَّأَ لِلصَّلاةِ فأَسْبَغَ الوُضوءَ، ثُمَّ مشى إلى الصَّلاةِ المكتُوبةِ فصَلَّاها مع الجماعةِ، غفرَ اللهُ له ذنوبَه**». رواه مسلم

8- عن أبي هريرة ﵁، قال: قال رسول الله ﷺ: «**من كذَبَ عليَّ مُتعمِّدًا فلْيَتبَوَّأْ مقعدَهُ من النَّار**». متفق عليه

9- عن عبد الله بن مسعود ﵁، قال: قال رسول الله ﷺ: «**لا يدخلُ الجنَّةَ مَن كان في قلبِه مِثقالُ ذرَّةٍ مِن كِبْرٍ**». رواه مسلم

10- عن عثمانَ بنِ عفَّانَ رضي الله عنه، قال: قال رسول الله ﷺ: «خيرُكم مَن تعلَّمَ القُرْآنَ وعلَّمَه». رواه البخاري

11- عن أبي هريرة رضي الله عنه، قال: قال رسول الله ﷺ: «كلمتانِ خفيفتانِ على اللسان، ثقيلتانِ في الميزان، حبيبتانِ إلى الرحمن: سبحانَ اللهِ وبِحَمْده، سبحانَ اللهِ العظيم». متفق عليه

12- عن أبي هريرة رضي الله عنه، قال: «أَوصاني خليلي ﷺ بثلاثٍ: صيامِ ثلاثة أيَّامٍ مِن كُلِّ شَهرٍ، ورَكْعتي الضُّحَى، وأَن أُوتِرَ قبل أن أنام». متفق عليه

13- عن أبي هريرة رضي الله عنه، قال: قال رسول الله ﷺ: «أَقرَبُ ما يكونُ العبدُ مِن ربِّه وهو ساجِدٌ، فأَكْثِرُوا الدُّعاءَ». رواه مسلم

14- عن ثابت بن الضَّحَّاكِ رضي الله عنه، قال: قال رسول الله ﷺ: «لَعْنُ المُؤْمِنِ كَقَتْلِه». متَّفقٌ عليه

15- عن أبي هريرة رضي الله عنه، قال: قال رسول الله صلى الله عليه وسلم: **«قال اللهُ تبارك وتعالَى: يا ابْنَ آدمَ، أَنْفِقْ أُنْفِقْ عليك»**. متفق عليه

16- عن أبي هريرة رضي الله عنه، قال: قال رسول الله صلى الله عليه وسلم: **«ما يُصيبُ المُسلِمَ مِن نَصَبٍ ولا وَصَبٍ، وَلا هَمٍّ وَلَا حَزَنٍ، ولا أَذًى ولا غَمٍّ، حتَّى الشَّوْكَة يُشاكُها، إلَّا كَفَّرَ اللهُ بها مِن خَطاياه»**. متفق عليه

17- عن أبي هريرة رضي الله عنه، قال: قال رسول الله صلى الله عليه وسلم: **«لا تَدخلُونَ الجنَّةَ حتى تُؤْمِنُوا، ولا تُؤمِنُوا حتَّى تَحابُّوا، أَوَلا أَدُلُّكُم على شَيءٍ إذا فَعَلتُمُوهُ تَحابَبْتُم؟ أفْشُوا السَّلامَ بينكم»**. رواه مسلم

18- عن أبي سعيدٍ الخُدْري رضي الله عنه، قال: قال رسول الله صلى الله عليه وسلم: **«لا يَنظُرُ الرَّجلُ إلى عَورَةِ الرَّجُلِ، ولا المَرأَةُ إلى عَورَةِ المَرأَة»**. رواه مسلم

19- عن الصَّعْبِ بنِ جَثَّامَةَ رضي الله عنه: أنه أَهْدَى إلى رسول الله صلى الله عليه وسلم صيدًا، فردَّه النبي صلى الله عليه وسلم عليه ولم يَقْبَلْه منه، فلمَّا رأى النبيُّ صلى الله عليه وسلم ما في وجهه من الحُزْن، قال: **«إنَّا لم نَرُدَّهُ عليك إلَّا أَنَّا حُرُمٌ»**. متفق عليه

20- عن حذيفة بن اليَمَانِ ﵁، قال: قال رسول الله ﷺ: **«لا يدخلُ الجنَّةَ قتَّاتٌ»**. متفق عليه

21- عن أنس بن مالك ﵁، قال: قال رسول الله ﷺ: **«ما مِن مُسلمٍ يَغرِسُ غَرْسًا، أو يَزْرَعُ زرعًا، فيأكل منه طيرٌ أو إنسانٌ أو بهيمةٌ، إلَّا كان له به صدقة»**. متفق عليه

22- عن أبي هريرةَ ﵁، قال: كان لرجلٍ على رسول الله ﷺ دَيْن، فجاء يتقاضاه وأَغْلَظ، فَهَمَّ به أصحابُ النبيّ ﷺ: فقال النبيُّ ﷺ: **«دَعُوهُ؛ فإنَّ لِصاحبِ الحَقِّ مَقَالًا»**. متفق عليه

23- عن أبي قتادةَ ﵁، قال: قال رسول الله ﷺ: **«مَن سَرَّهُ أن يُنْجِيَهُ اللهُ مِن كُرَبِ يومِ القيامة، فَلْيُنَفِّسْ عن مُعْسِرٍ، أو يَضَعْ عَنه»**. رواه مسلم

24- عن أبي هريرة ﵁، قال: قال رسول الله ﷺ: **«مَن غَشَّنا فلَيس مِنَّا»**. رواه مسلم

25- عن أبي أُمَامَةَ رضي الله عنه، قال: قال رسول الله صلى الله عليه وسلم: «**من اقتَطَعَ حَقَّ امْرِئٍ مُسلِمٍ بِيَمِينِه، فقد أَوجَبَ اللهُ له النَّارَ، وحَرَّمَ عليه الجَنَّةَ**»، فقال رجل: يا رسولَ الله، وإن كان شيئًا يسيرًا؟ قال: «**وإِنْ قَضِيبًا مِن أَرَاكٍ**». رواه مسلم

26- عن أبي موسى الأشعريّ رضي الله عنه، أنَّ النبيَّ صلى الله عليه وسلم بعَثَهُ ومعاذًا إلى اليَمَن، وقال لهما: «**يَسِّرَا ولا تُعَسِّرَا، وبَشِّرَا ولا تُنَفِّرَا، وتَطَاوَعَا ولا تَختَلِفَا**». متفق عليه

27- عن أبي موسى الأشعريّ رضي الله عنه، قال: قال رسول الله صلى الله عليه وسلم: «**من حَمَلَ عَلَينا السِّلاحَ فَلَيس مِنَّا**». متفق عليه

28- عن عبد الله بن مُغَفَّلٍ رضي الله عنه، أنَّ رسول الله صلى الله عليه وسلم نَهى عن الخَذْفِ، وقال: «**إنَّها لا تَصِيدُ صَيدًا، ولا تَنْكَأُ عَدُوًّا، ولكِنَّهَا تَكسِرُ السِّنَّ، وَتَفْقَأُ العَيْنَ**». متفق عليه

29- عن أنس بن مالك ﵁، قال: «**خَدَمْتُ النَّبِيَّ ﷺ عَشْرَ سِنِينَ، فما قال لِي أُفٍّ قَطُّ**». متفق عليه

30- عن أبي هريرة ﵁، قال: قال رسول الله ﷺ: «**إذا قامَ أَحَدُكم مِن مَجْلِسِه ثُمَّ رجع إليه، فَهُوَ أَحَقُّ بِه**». رواه مسلم

31- عن أبي هريرةَ ﵁، قال: قال رسول الله ﷺ: «**حقُّ المُسلمِ على المُسلم سِتٌّ: إذا لَقِيتَهُ فَسَلِّمْ عليه، وإذا دعاك فأجِبْهُ، وإذا اسْتَنْصَحَكَ فَانْصَحْ لَهُ، وَإِذَا عَطَسَ فَحَمِدَ اللهَ فَشَمِّتْهُ، وإذا مَرِضَ فعُدْهُ، وإذا ماتَ فَاتْبَعْه**».

32- عن أبي سعيد الخدري ﵁، قال: قال رسول الله ﷺ: «**أَعْطُوا الطَّرِيقَ حَقَّهُ**»، قالوا: وما حقُّه؟ قال: «**غَضُّ البَصَرِ، وَكَفُّ الْأَذَى، ورَدُّ السَّلامِ، وَالأَمْرُ بِالمَعرُوفِ وَالنَّهيُ عَنِ المُنكَر**». متفق عليه

33- عن عبد الله بن عُمَرَ رضي الله عنه، قال: قال رسول الله صلى الله عليه وسلم: **«ما حَقُّ امرِئٍ مُسلِمٍ لَهُ شَيءٌ يُوصِي فِيه، يَبِيتُ لَيلَتَينِ إِلَّا وَوَصِيَّتُهُ مَكتُوبَةٌ عِندَه»**. متفق عليه

34- عن عبد الله بن عُمَرَ رضي الله عنهما، قال: قال رسول الله صلى الله عليه وسلم: **«إِنَّ اللهَ يَنهاكُم أَن تَحْلِفُوا بِآبائِكُم، مَن كان حالِفًا فَلْيَحْلِفْ بِاللهِ أَوْ لِيَصْمُتْ»**. متّفقٌ عليه

35- عن أبي هريرةَ رضي الله عنه قال: **«مَا عَابَ النَّبِيُّ صلى الله عليه وسلم طعامًا قَطُّ، إِنِ اشْتَهاهُ أَكَلَهُ، وَإِلَّا تَرَكَهُ»**. متفق عليه

36- عن البراء بن عازبٍ رضي الله عنه، قال: **«كَانَ رَسُولُ اللهِ صلى الله عليه وسلم أَحسَنَ النَّاسِ وَجْهًا، وَأَحْسَنَهُمْ خَلْقًا، لَيسَ بِالطَّوِيلِ الْبَائِنِ، وَلَا بِالْقَصِيرِ»**. متفق عليه

37- عن عَمْرو بن العاص ﵁، قال: سألتُ النبيَّ ﷺ: أيُّ الناس أَحَبُّ إليك؟ قال: «عَائِشَةُ»، فقلتُ: مِنَ الرجال؟ قال: «**أَبُوهَا**»، قلت: ثُمَّ مَنْ؟ قال: «**ثُمَّ عُمَرُ بنُ الخطَّاب**». متفق عليه

38- عن أنس بن مالكٍ ﵁، قال: كان أكثر دعاء النبيُّ ﷺ: «**اللَّهُمَّ آتِنَا في الدُّنيا حَسَنَةً وفي الآخِرَةِ حَسَنَةً، وَقِنَا عذاب النَّارِ**». متفق عليه

39- عن أبي هريرة ﵁، قال: قال رسول الله ﷺ: «**إذا ماتَ الإنسانُ انقَطَعَ عَمَلُهُ إلَّا مِن ثلاثةٍ: إلَّا مِن صدقةٍ جاريةٍ، أو عِلمٍ يُنْتَفَعُ به، أو ولدٍ صالِحٍ يَدْعُو له**». رواه مسلم

40- عن جابر بن عبد الله ﵁، قال: قال رسول الله ﷺ: «**يُبْعَثُ كُلُّ عَبدٍ على ما ماتَ عليه**». رواه مسلم

# பொருளடக்கம்

ஹதீஸ் இல *(16)* : சோதனைகள் பாவங்களுக்குப் பரிகாரம்

ஹதீஸ் இல *(17)* : ஸலாத்தைப் பரப்புதல்

ஹதீஸ் இல *(18)* : அவ்ரத்தை மறைத்தல்

ஹதீஸ் இல *(19)* : அன்பளிப்புகளை ஏற்றுக் கொள்ளல்

ஹதீஸ் இல *(20)* : கோள் சொல்பவன் சுவனம் செல்ல மாட்டான்

ஹதீஸ் இல *(21)* : வேளாண்மையின் சிறப்பு

ஹதீஸ் இல *(22)* : பேச்சுரிமை

ஹதீஸ் இல *(23)* : பிறர் துயர் துடைத்தல்

ஹதீஸ் இல *(24)* : மோசடி செய்தல் கூடாது

ஹதீஸ் இல *(25)* : பிறர் உரிமையை அபகரித்தால்.....

ஹதீஸ் இல *(26)* : இலகுபடுத்திக் கொடுத்தல்

ஹதீஸ் இல *(27)* : முஸ்லிம்களுக்கு எதிராக ஆயுதமேந்துதல் கூடாது

ஹதீஸ் இல *(28)* : கற்களை சுண்டி விளையாடுதல் கூடாது.

ஹதீஸ் இல *(29)* : நபியவர்களின் நற்பண்பு

ஹதீஸ் இல *(30)* : சபையொழுக்கம்

ஹதீஸ் இல *(31)* : முஸ்லிமுக்குச் செய்ய வேண்டிய கடமை

ஹதீஸ் இல *(32)* : பாதையொழுங்கு

ஹதீஸ் இல *(33)* : மரணசாசனம் எழுதுதல்

ஹதீஸ் இல *(34)* : அல்லாஹ் அல்லாதோர் மீது சத்தியம் செய்தல்

ஹதீஸ் இல *(35)* : உணவைக் குறை கூறலாகாது

ஹதீஸ் இல *(36)* : நபியவர்களின் தோற்றம்

ஹதீஸ் இல *(37)* : நபியவர்களுக்கு மிக நேசத்திற்குரியவர்

ஹதீஸ் இல *(38)* : நபியவர்கள் அதிகமாகக் கேட்ட துஆ

ஹதீஸ் இல *(39)* : மரணத்தின் பின்னரும் நன்மை தருபவை

ஹதீஸ் இல *(40)* : இறுதி முடிவு

## தமிழ்

- இந்நூல் சிறார்களுக்கு உகந்தது. அவ்வாறே வளர்ந்தோருக்கும் இது பொருந்தும். இதில் அல்குர்ஆன் வசனம், நபிமொழி, அறிஞர்களின் கூற்றுகளிலிருந்து பெறப்பட்ட வார்த்தைகள், அல்லது கருத்துக்கள் அடங்கிய பயனுள்ள தகவல்கள் மாத்திரமே உள்ளன.

- இலகுவாக மனனமிடவே இச்சிறு நபிமொழிகளைத் தேர்வு செய்துள்ளேன். அதிக பயன் கிட்டவே பல்வேறு தலைப்புகளில் வகைப்படுத்தியுள்ளேன்.

- இலகுவாக மனனமிடவும், மீட்டவும் நூலின் இறுதியில் அனைத்து நபிமொழிகளையும் முழுமையாக, தொடர்ச்சியாகக் கூறியுள்ளேன்.

- அடிப்படையில் சிறார்கள் மனனமிடுவதற்காகவே இந்நாற்பது நபிமொழிகளையும் தொகுத்துள்ளேன். எனவே வீடுகள், கல்விக்கூடங்கள், மன்றங்கள் போன்றவற்றில் இதனை மனனமிடுவதற்கான போட்டி நிகழ்ச்சிகளை நடத்துமாறு ஆலோசனை தருகின்றேன்.

- சிறார்கள் இதனை மனனமிட முன் அவர்களின் நாவுகளைச் செம்மைப் படுத்தவும், இந்நபிமொழிகளிலிருந்து பெறப்பட்ட இஸ்லாமிய ஒழுக்க நெறிகளை அவர்களுக்குப் போதிக்கவும் ஆண், பெண் பிள்ளைகளுக்கு இந்நூலை முதலில் வாசித்துக் காட்டுவதற்கு பெற்றோர்கள், ஆசிரிய, ஆசிரியைகள் ஆகியோரை ஊக்குவிக்கின்றேன்.

- நபிமொழியின் விளக்கவுரையில் பல கருத்துக்கள், பயன்பாடுகள், வழிகாட்டுதல்களை நான் கூறியிருந்தாலும், அதனை விட மிக அதிகமான கருத்துக்கள், பயன்பாடுகள், வழிகாட்டுதல்கள் மேலும் உள்ளன. எனவே சிறார்கள் தனியாகவோ, பிறர் துணையுடனோ அவற்றை ஆராய்ந்தெடுத்து, தானும் பயனடைந்து, பிறருக்கும் பயனளிப்பதற்காக அவற்றைப் பகிர்ந்து கொள்ளுமாறு எதிர்பார்க்கின்றேன்.

கலாநிதி / முஹம்மத் பின் ஸுலைமான் பின் அப்தில்லாஹ் அல்முஹன்னா

مركز أصول
Osoul Center
www.osoulcenter.com